உ

கணபதிதுணை.

# சிவஞானதீபம்.



பேராளம்

## இரேவணாராத்திரியதேசிகர்

அருளிச்செய்தது.



இஃது

திருக்கைலாசபரம்பரைப்

பொம்மையபாளையம்

சிவஞானபாலையதேசிகராதீனத்து

இராமலிங்கசுவாமிகளால்

பரிசோதிக்கப்பட்டு


சிதம்பரம்

ஸ்ரீசபாநாயகர் திருவனந்தல் காலைசந்திக்கட்டளை

சி. கந்தசுவாமிமுதலியாரால்

சென்னை

மநோன்மணிவிலாசவச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.




சிவசண்முகன்றுணை.

# செய்யுளகராதி.

சிவசண்முகன்றுணை.

# சிவஞானதீபம்.

## பாயிரம்.

### விநாயகக்கடவுள்.

விரைமருவுங்கமலமலர்விரிஞ்சன்வாழ்வும்
விண்ணவர்கோனரும்பதமுமிக்கோர்வாழ்வுந்
திரைமருவுநிதிபதியிற்றிருவின்கேள்வன்
செல்வமுமானுதபெருஞ்சித்தியாவும்
பரையுதவுங்கரிமுகவன்செம்பொற்பாதம்
பற்றுகத்தம்போதப்பற்றுநீங்கி
வரைவறுமன்பினிற்றெழுமெய்யடியார்பாதம்
வணங்குமடியாரடியார்மதித்திடாரே. (க)

### சபாபதி.

ஓராரக்கரமுதலாங்கலைகள்யாவுஞ்
சிவஞ்சத்திமுதலியதத்துவங்கள்யாவு
மோராருஞ்சராசரமாமுயிரியாவு
மெண்ணரியபுவனமுமற்றியாவுமெல்லா

மாராதகருணையினாலாக்கிநோக்கி
 யழித்திரவிவிழிநறையுமலநம்போலப்
பேராமலுயிர்க்குயிராய்மன்றுளாடும்
 பெருமானையவனருளாற்பேணுவாமே. (உ)

## சிவகாமியம்மையார்.

தற்பரனுக்குலகுதனுகரணமாகிச்
 சாற்றிலளவறுபேதசத்தியாகி
யற்புதமாய்விந்துமோகினிமானாகி
 யனைத்தினையும்படைத்துயிர்கட்கன்னையாகிச்
சொற்பரவுமறைமுதலாங்கலைகளானுந்
 தொழிலானுநினைவானுந்தொடரொணாத
சிற்பரையைப்பொற்பொதுவிலாடல்காணுந்
 திருவருளைப்பவமகலச்சிந்தைசெய்வாம். (௩)

## குருவணக்கம்.

திருமறைமாமுனிவருக்கன்றாலநீழற்
 றிருந்தவறமுரைத்தபெருந்தகைதானிந்த
விருநிலமேலருளுருவாய்வந்துதோன்றி
 யியைந்திடுநெற்றவிடுமுளையுமிபோலேய்ந்த
திரிமலவேரினைநினைவாலுரையான்ஞானச்
 செய்கையினாலறுத்திருதாள்சென்னிசூட்டுங்
குருபரனையருளுலகவாதைநீக்குங்
 குணக்கடலைமனத்திலுறவணக்கஞ்செய்வாம். (௪)

## அவையடக்கம்.

பூவுலகின்முழுதுமொருங்குணர்ந்தநல்லோர்
புகன்றருளுஞானநூற்றிறமுநோக்கி
நாவலர்முன்னருந்தமிழின்செய்யுணீதி
நலமுணராவினையேனுநகைகநாணுமன்
மேவரியசிவஞானதீபமென்றே
விளம்பியதுவளர்தருபால்வேலைதன்னைத்
தேவர்கடைந்திடவெழுந்தவமுதம்போலச்
சிறுபுனலைக்குடைந்துநுரைதிரட்டுமாறே. (௫)

சிவனுடையமாமரத்தைச்சேர்ந்துநின்ற
திரண்மாமுமதனிறமாமொருமைபோலுங்
குவலயமீதினிற்காகமேருசாரிற்
குலவியபொன்னிறமாகுநிலைமைபோலு
மூவர்மருவுமுததியினில்வந்துகூடு
முதகமதினொன்றாகுந்தகைமைபோலுந்
தவமருவுமறிவுடையோரவைமுன்யானுஞ்
சாற்றியவிப்புன்சொலுமத்தன்மையாமே. (௬)

பாயிர முற்றிற்று.

—o—

# பொது.



கருணைமிகும்பரஞானவடிவினாலே
　கழிக்குமலம்விஞ்ஞானகலருக்கீச
னருணிலவுங்குடிலைவடிவாகமேவி
　யரும்பிரளயாகலருக்ககற்றும்பாச
மருணிலவுஞ்சகலருக்காதாரமாகி
　வருமாயையுருவினிற்றீவகமாமென்னத்
தரணிதனிலிருவகையாமவுத்திராதி
　தன்னான்மும்மலமகற்றித்தருந்தன்றாளே. (க)

பாசவிருளைவகையுமிரியநோக்கிப்
　பரமனருட்குருவாய்வந்துணர்த்தினாலும்
பாசமகலாதுபிரபஞ்சவாழ்க்கை
　பரிந்தாசையுடனுயிர்கள்விரும்புநீர்மை
யோசையுததியினீரையெடுத்துமேக
　முவாகற்றியமுதாக்கியுலகம்போற்ற
நேசமுறவைத்திடினுநில்லாதோடி
　நெடுங்கடல்புக்குவராகுநீரொப்பாமே. (உ)

பொருளுடலாவியுமிறைவனுடைமையென்றே
    பொருவிலருட்குரவன்பாலளித்தஞ்ஞான
மருளகலுமுத்தமர்மெய்ம்முத்திசேர்வர்
    மற்றொருபாலாசானுக்கெனவேநல்கிற்
றெருளுமுருத்திரருலகம்புகுவரெல்லாந்
    திகழ்மனையாள்புதல்வருக்கென்றாக்கியாசாற்
கிருளுமனத்தாலியன்றதுதவுஞ்சிட
    னிரவிமதியுலகடைவனிறக்குங்காலே. (௩)

கொலையாதிநெறியகன்றஞானந்தானே
    கூறரியமேலானஞானமாகுங்
கொலையாதியகன்றொழுகுந்தவங்கடாமே
    குற்றமிலாநற்றவமென்றுரைக்குநூலுங்
கொலையாதியகற்றியநல்லறங்கடாமே
    குவலயத்திலொப்பரியவறங்களாகுங்
கொலையாதியகன்றுபெறுஞ்செல்வந்தானே
    கூறினுயிர்க்கிதமானவாழ்வதாமே. (௪)

எவ்வுயிரும்பராபரன்சந்நிதியதாகு
    மிலங்குமுயிருடலனைத்துமீசன்கோயி
லெவ்வுயிருமெம்முயிர்போலென்றுநோக்கி
    யிரங்காதுகொன்றருந்துமிழிவினோரை

வவ்வியமன்றாதாருந்தண்டஞ்செய்து
வல்லிரும்பையுருக்கியவர்வாயில்வார்த்து
வெவ்வியதீயெழுநரகில்வீழ்த்திமாறு
வேதனைசெய்திடுவரெனவோதுநூலே. (ரு)

நிலையுறுதியாசாரமொழுக்கஞ்சில
நிறையறிவுகருணைதவநெறியிலாமற்
கொலைகளவுகட்காமமுதலாயுள்ள
கொடும்பவமேதவமாகக்கொள்ளுந்தீயோ
ருலகிலருஞ்சிவனருணூலோதலாகா
தோதினுமங்கவருரைகொள்ளொணாதுநீலம்
புலையர்மருவிடுந்தெருவிற்பொல்லாக்கும்பி
பொருந்தியிடுங்குழியதனுட்பூத்ததாமே. (சு)

அருந்தவர்களிறையருணூல்விதிவழாம
லணிந்திடுவர்கற்பமுதலாதியாகப்
பொருந்தியநீறவனிசலமெரிகாலண்டம்
புகல்வடிவம்போலவுமெய்ம்முழுதும்பூசல்
வருந்துகுறைப்புண்டரகீடாயுள்குன்று
மலிதீர்க்கபுண்டரமாதவங்கணீங்குந்
திருந்துவிழியிணைநிறுவும்பிரமாணத்திற்
றிகழ்திரிபுண்டரம்பவநோய்தீருமன்றே. (எ)

ஒருகரத்தைநீட்டிவிரன்மூன்றால்வாங்கி
  யொருவிரலாற்பிடித்திறங்கியொளிர்வெண்ணீறு
பெருநிலத்தில்விழப்புனைவோரிரவிசோமன்
  பெருங்காலமருநரகிற்பேராதாழ்வ
ரிருகரத்தாற்றொழுதேற்றங்கிறைவனாசா
  னெறிபதவையசுத்தநிலத்தெதிர்பூசாமற்
றிருவரைத்தோள்செவிவிரவப்புனைவோரென்றுந்
  திருவருளாலிறையுலகஞ்செறிந்துளோரே. (௮)

நிரந்தமனவாக்குடலாலணைந்தகன்ம
  நீங்குவதெவ்வாறெனவேயியம்பவேண்டா
பரந்தகொலைப்பாதகன்கைக்கத்தியேனும்
  பரிசனவேதியைப்பரிக்கப்பொன்னாமாபோல்
விரிந்தமரத்தமர்ந்தபலபறவையெல்லாம்
  விரைந்தொருகல்லெறிந்திடவிட்டேகுமாபோ
லரன்றிருநாமத்தையுரைத்தொருகால்வெண்ணீ
  றணிந்திடவெவ்வினையனைத்துமகன்றுபோமே. (௯)

மண்ணறலைநெருக்கிடும்போழ்துதகமேனோக்கு
  மண்ணெகிழ்ந்தூற்றிருந்துவெளுத்திடுமயிர்தோற்
றிரங்குந், தண்ணறலங்கியைநெருக்கிலுணவுசெல்லா
  ததனாற், றாதுக்கள்வற்றிடுந்தீச்சமீரணனைநெருக்கி

லுண்ணிலவுவளிசுருங்குங்கண்ணொளிபோமதனு
லோடனடத்திடலரிதாமொலிவிசும்பைநெருக்கிற்
றிண்ணமிகுஞ்செவிமந்தித்துரக்குமேன்மூச்சுச் [ன்.
சேணுயிரைநெருக்கின் மனங்கலங்கும் விடுஞ்சீவ

இட்டமிகுமிளமைநலமீரைந்தாண்டதனி
லிருபதினில்வளர்ச்சியுமுப்பதுவருடத்தழகு
முட்டகையமேதையுநாற்பதுவருடத்துடலி
லொண்பலமுமைம்பதினிலறுபதினிற்ருதுந்
திட்டியுமங்கெழுபதினிலெண்பதினிற்செவியுந்
திகழ்மனமுந்தொண்ணூறிற்சிவனுநூறளவில்
விட்டகலும்விரவியுதித் தொடுங்குவதென் றுணர்ந்தோர்
வீணாள்பட்டொழியாமல்விரும்புவர்நற்றவமே. ()

மதியிரவிபொருந்துநிலைதிருந்தக்கூறின்
மனமுதியாமனந்தனில்வேர்கொண்டவாயு
முதிரினுமிதுமதியின்களங்கமாக
மொழிந்திடுவேர்மூலவளிசிறனுமீதா
மதிவிலகுகலைகளிருபக்கமாக
மரித்தொடுங்கியுதிப்பதுமிவ்வளியின்பாலாங்
கதிநிறுவுங்குணமாதிகரணமெல்லாங்
கருதியகாற்றனிலடங்கியுதிக்குமாபோல். (கஉ)

இதயமதிற்பிராணனிலையபானனுறுங்குதத்தி
லிலஞ்சியினிலுதானனுடலெவவளவும்வியானன்
றிதமுறுகண்டத்திடையி சந்ததனிற்சமானன்
றிகழ்நாகன்முடக்கலுநீட்டுதலுடன்கொட்டாவி
விதமலியுங்கூர்மனிமைத்திடுதன்மயிர்ப்புளகம் [ஞ்
வெம்மைசினந்தும் க்கிரிகரன்முகத்தில்விளக்கு
சதுர்விதிர்ப்போடற்றேவதத்தன்றனஞ்சயன்சேர்
தனுவகலினுடல்வீங்கித்தலைகிழித்திட்டேகும். ()

இந்திரநீலத்தொளியாம்பிராணனிறமபான
னிந்திரகோபத்தொளியாமின்னொளியாமுதானன்
முந்தியபானிறமாகும்வியானனிருஞ்சமானன்
முருகவிழும்பூவைப்பூநிறமகலாநாகன்
சந்தமிகுமிளங்கதிரோனிறமினிதாங்கூர்மன்
றருகுருந்தமலர்நிறமாக்கிரிகரனஞ்சனமா
மந்தமுறும்பளிங்குநிறத்தேவதத்தன்றனஞ்ச
யனஞ்சனநீலத்தொளியாயாக்கைநடத்திடுமே. ()

நயந்துசமாதியிலியங்கும்பன்னிரண்டங்குலிதா
னடந்திடிலீரெட்டுவிரலியங்கியிடுநவையார்
துயங்கவிரைந்தோடிடிலையாறுவிரலியங்குந்
துயிலுறிலெண்ணைந்துவிரற்கிடையுடல்விட்டகலுந்

தயங்கியவேல்விழியாரைமுயங்கியிடும்பொழுதிற்
றரியாதென்னெனவ்விரலினளவுயிர்விட்டியங்கும்
பயங்கொளிடைபிங்கலைகளொருவழிப்பட்டிடவே
பரிந்தநற்குண்டலியோகம்பொருந்திடுமங்குறவே.

கரிமுகவற்கறுநூரும்பிரமன்மாயன்
கண்ணுதற்குமூவாருயிரமதாகும்
பரிவினுடன்மகேசனுக்காயிரமதாகும்
பகர்வரியசதாசிவற்கீரைந்நூருங்
தெரிவரியசிற்பரைக்குமீரைந்நூருந்
திகழ்ந்திடுமேழாதாரத்தியங்கும்வாயு
வரியவறுநூறுடனுயிரமூவேழு
மகாரவுகாரமகாரத்தடங்குந்தானே. (கசு)

அகாரமுலகினைவிரிக்குமுகாரமொடுக்குவதா
மவ்விரண்டுநடத்துமவைக்குள்ளொளியாமகார
மகாரவுகாரமகாரம்பிரணவமாமதுவே
யாரணவித்தாமசபையதனிடமாயியங்கு
மகாரவுகாரமகாரமிலிங்கபீடமுமா
மாருயிர்களைம்புலனுமதனிடமாயருந்து
மகாரவுகாரமகாரம்பிண்டமுமண்டமுமா
மகாரவுகாரமகாரமண்டகடாகமுமே. (கஎ)

மூலமதினாற்சதுரநாலிதழ்முக்கோண
முழுச்செம்மைநிறம்புனன்மண்ணடுவெரி மண்ட
கோலுமிதயத்திலறுகோணமிதழெட்டாங் [லமாங்
குறிதருபொற்பளிங்குநிறங்குலவெரிகானடுவே
மாலுமரம்பையின்முகைபோலதோ முகமாமதனின்
மனோன்மனியெண்சத்தியுடன்மகிழ்கதிர்மண்டலமாம்
பாலமுதகலையொழுகுங்கபாலநடுக்கோடி
பனிமதியினிறம்பரையினிடமதிமண்டலமே. ()

ஆதாரநிராதாரமீதானமெனமூன்
றுருயிர்களிறைவனடியடையுநெறிபவைதா
மாதாரந்தத்துவதேவதைவடிவைத்தியானித்
ததுவதுவாய்நின்றவற்றின்பயன்களருந்துவதா
மோதாருநிராதாரங்கருவியெலாமகன்றே
யுயிர்க்குயிராயோங்கொளியோடொழிவறநிற்பதுவா
மீதானமவ்வொளிக்குமுதலாய்நின்ற
விமலனுடன்மலமறவேமேவுதலாம்விதியே.(கக)

விதிநிறம்பொன்மூலமதாமாணிறங்காருந்தி
விளங்கிதபஞ்செம்மையரன் புகையீசன்களத்தின்
மதிநிறமாஞ்சதாசிவனுவினிற்புருவத்திடையில்
வளர்பளிங்கினிறம்விந்துநாதமதிற்றெளிவா

முதிருமதன் மிசையிருளாணவமலமாமதன்மேன்
　முயங்குதிரோதானமிசைமுதனடுவீறகன்றே
யதிகமதாமெவ்வொளிக்குமுள்ளொளியாம் பரையே
　யரியசிவம்பரைக்குமுதலடுத்ததுவாமுயிரே. (௨௦)

பிரமனரியுருத்திரனோடீசனென்கும்
　பெருகுதிரநிலைமருவுமுருவமாகும்
பரவரியவிந்துவுடனாதமீதிற்
　பராபரமசிவமெனவேபகர்ந்தநான்கு
மருவநிலையாமுபயகூட்டந்தானே
　யருணிலவுமிலிங்கசதாசிவமதாகு
முருவமதிற்சிருட்டிதிதியுபயர்தன்னி
　னெடுக்கிடுவனருவத்தாலனைத்துமேகன். (௨௧)

உருவமுடனருவமருவுருவமென்றே
　யுரைத்தநவவிதமுமரனுருவமாகி
விருவரரிபிரமரைவேறாகக்கொண்டே
　யிகழ்வதுவேனெனிலதனையியம்பக்கேணீ
பொருவிலுடறனில்வாயிலொன்பான்றன்னைப்
　பொருந்துமுயிரேகமதிற்பொருந்திற்றேனு
மருவுகுதமுபத்தமிவையசுத்தமாக
　வரைந்திடுவாதுபோலமதித்துப்பாரே. (௨௨)

முருந்துநகையுமைகணவனிணையிறில்லா
முதல்வனுடன்றுளபமணிமுடியோன்றன்னைப்
பொருந்துமிறையெனவிகராவுரைக்கும்பேதைப்
பொறியிலிகாளொருதிவசம்புரிந்துசெய்யை
யருந்துமெலிசுடரொளியைமுடுக்கஞால
மனைத்தினையுமுகந்திறைவனளித்தான்மாயன்
றிருந்தியமூவுலகினையன்றுதவினோற்குச்
சிறையளித்தானுத்தமரார்தெளிந்திடீரே. (௨௫)

அரியீரைந்தவதாரச்செயலியாவு
மரன்செயலாமாலறியாதகந்தைகூறற்
றிரிவாகுமுடல்வாலதருணமூப்பின்
செயனுயிரின்செயலாகுஞ்செய்திபோலும்
விரிவாமைர்தொழிலையுமெம்மிறைவன்றனே
மிகுபடர்க்கைமுன்னிலைதன்மையிலுண்டாக்குந்
தரியாதன்றிராமனுடன்பரசுராமன்
சமர்பொருதகதையுலகிற்சாற்றுவீரே. (௨௬)

வருடையெருச்சிலைமணனீர்குளமாவன்ன
மலர்மாலைநவநீதமடவார்கொங்கை
வெருடருமாமொக்கணிகன்றுப்புநாழி
விலங்குலவைகுசைதடிவாளினுமெங்கெங்கு

மருடருமெம்மிறையுளனென்றிறைஞ்சுவோருக்
கடிநடுவீறிலாமுதல்வனுதலாலே
மருடருபேய்வயிணவனேவிசயன்மாலை
வழுத்தியதிவ்வாறெனவேமதித்திடாயே. (உரு)

சதுரயுகமவையிரண்டாயிரந்தாஞ்சென்றாற்
சதுர்முகனுக்கொருதிவசந்தகையார்வாணி
பதிமகிழுந்தினத்திலொருபகலிற்றானே
பதினால்வரிந்திரர்தம்பதம்போமிந்த
விதியடைவேபிரமரொருகோடிநீங்கின்
விண்டுவினுக்கொருபகலாய்விழியாற்றுஞ்சு
மதிதிருமாலொருகோடியிறக்குங்கால
மலரளகமவிழ்த்துமையாள்முடிக்குநேரம். (உசு)

ஆரணநூலரிபிரமர்நவின்றாரென்றுரைப்பீ
ராரணமுன்னூல்பலவுமக்கரத்தாலுளவாஞ்
சீரணியுமக்கரநால்வாக்கதனாலுளவாஞ்
சிவமுதலைவருநாலுவாக்கதனைச்செலுத்து
மேரணியுமூவகையாமுயிர்தமக்குஞான
மிசைந்திடுமிங்கிதனாலேயீரிருவாக்கிலேயே
நாரணனம்புயன்றனக்குமறிவுதியாமறைநூ
னவிலுவதெப்படியீசனவிற்றியதென்றுணரே. ()

விழிகளிலாதவர்கள்சிலர்வேழங்காணும்
விருப்பினுடன்செவிதுதிக்கையெயிறுபாதம்
வழுவறுவாலுடலதனைக்கரத்தாற்பற்றி
வாரணமிவ்வாறெனவேமதித்துத்தம்மி
விழிவினுடன்றனித்தனிமுன்கண்டவாறே
யானையினேரியம்பிமலைந்திடுதல்போலும்
பழிநிறுவுங்கபடநெறிச்சமயத்தோர்கள்
பரனியல்பைவெவ்வேறுபகுக்குமாறே. (உஅ)

தன்னறிவாப்புறச்சமயநிலையோர்பேறு
தலையினுனடந்துகதியடைதல்போலு
முன்னரிதாமகச்சமயநிலையினின்றே
யொண்சரியைகிரியைமிகுயோகஞான
மென்னுமிவையொருநான்குமியற்றினோர்க
ளிவ்வடைவேகால்வேகம்பறவைவேகம்
பன்னருமாருதவேகமனவேகம்போற்
பற்றிடுவர்சிவானந்தமுத்திதானே. (உகூ)

வாதஞ்செற்பம்விதண்டையேதுவௌ ரான்காம்
வாதமொருவன்மதத்தாற்றருக்கமுரைப்பதுவா
மோதுமவன்றருக்கமதற்கெதிர்விடயம்பொருந்த
வுரைப்பதுவேசெற்பமெனவுலகறியமொழியு

நீதியினலவனுரைகொண்டவனுரையைமறுத்தே
நிலையானபொருளுண்மைநிகழ்த்திடுதல்விதண்டை
யேதுபலநூலினுதாரணமெடுத்துக்காட்டி
யெதிரிமதமறுத்திடுதலெனுந்தருக்கநூலே. (௩௦)

தன்னிகரிலரியயன்முன்சகலத்தோர்க்குந்
தனுகரணம்புசிப்புலகமசுத்தமாயை
யுன்னிலுருத்திராதிமும்மையோர்க்கு
மொருமலமோடிருமலமாமுயிர்கட்கெல்லா
மன்னுமுலகுடல்கரணம்போகமெல்லா
மாயேயமிவையுயிர்க்குவகுத்துலோகம்
பன்னியமூவகையுயிரும்பெற்றுநோக்கும்
பராபரையேசிவலோகம்பரனுக்காமே. (௩௧)

அவ்வுயிர்போலெவ்வுயிர்க்குமறிவாகிநிறைந்தே
யானந்தசுகாதீதத்தப்புறத்தப்புறமா
யிவ்வுருவமிதுநிலயமிதுவெனுஞ்சுட்டிலதா
யேகமாயாதிநடுவீறகன்றமுதலா
யெவ்வெவரெப்படிநினைந்தாரவ்வவர்க்கப்பொருளா
யெண்ணுமனபாவகத்தானண்ணரியவொளியா
யொவ்வியசித்துடனசித்துமல்லதுவாயுற்ற
வுருவருவமுபயமகன்றுளதாகும்பதியே. (௩௨)

செப்பருமாருயிர்வருக்கமளப்பரிதாயென்றுஞ்
செறிதருமாணவவிருளாலனாதிமறைப்புளதாய்த்
தப்பரியவிருவினையின்றுய்ப்பதனுக்கிசைந்த
தனுவாதிவிதமாயைதரவவற்றைப்பொருந்தி
யப்பரிசேயுயர்திணையோடஃறிணையாய்விரிந்தே
யருநிரயஞ்சுவர்க்கநிலமிசையிதமோடகித
மெய்ப்புறநின்றருந்தியலமருமிறைவனருளா
லிருவினையொத்திடிலரியபரபதமுற்றிடுமே. (௫௫)

ஆணவநற்றிரோதாயிமாயேயமாயை
யரியவிருவினைக்கன்மமாமலமைந்தவற்றி
னாணவமஞ்ஞானவிருள்குடிலைசிவன்முதலா
மைவருக்குந்தனுவாகியைந்தொழிலுமியற்றும்
பூணுலவுகலாதியுடன்றனுமுதனால்வகையும்
புகல்சகலர்க்களித்துநடத்திடுமசுத்தமாயை
மாணவிருவினைப்பயனாந்துக்கசுகங்கன்ம
மலபாகமுயிர்க்குதவுந்திரோதையருள்வடிவே. ()

ஆணவமுன்மாயைமுடிவாமலமைந்தவற்றி
னாணவமுங்கன்மமுமாருயிர்க்கலாமலமாம்
பூணுமிருமாயையிருந்திரோதையிவைமூன்றும்
புனிதன்மலமாமலங்கள்புனிதனுக்கேனென்னின்

மாணவிருண்மலங்கன்மமொழித்துயிர்கட்கின்ப
  மகிழ்ந்துதவுங்கருணையினால்வைத்ததுவாமுலகிற்
பேணுமருமருந்துபலவகைகொடரும்பிணிநோய்
  பெருகுமருத்துவனகற்றுந்திறமதுபோற்குறியே.

பொய்யானவுடலுமிருவினைகடாமும்
  பொருவரியவுயிருமுயிர்க்குயிராய்நின்ற
மெய்யானவொருவனுமூன்றென்றதாலே
  விரிதருமாணவமறைத்துநின்றதென்றும்
பொய்யானவுடலுமிருவினைகடாமும்
  பொருவரியவுயிருமுயிர்க்குயிராய்நின்ற
மெய்யானவொருவனுமூன்றென்றலாலே
  விரிதருமாணவமகன்றதென்றுங்காணே. (௩௬)

நிச்சயவஞ்ஞானமனவிகற்பந்தீமை
  நிலையிலாப்பொருள்விருப்பல்பொய்ம்மைகூற
லிச்சையுடனிகழ்வானபோகந்துய்த்த
  லென்னைநிகரில்லையெனவகந்தைகூற
னச்சியறிந்ததைமீளமறத்தறுஞ்ச
  னண்ணுமுயிரினைப்பிரியாதிருத்தலென்று
மச்சமிகுமதிகாமவேட்கையெல்லா
  மாணவத்தின்கூறெனவேயறிந்திடாயே. (௩௭)

குருமொழியைவழுவல்குருநிந்தைகூறல்
குருவையெதிர்கண்டளவில்வணங்காணன்
மருவியசெய்ந்நன்றிபிழைத்தறம்பேணாமை
வஞ்சமினாதுரைத்திடன்மாயையின்கூறாகுஞ்
செருமுயர்ச்சிமனவாக்குக்காயத்தெய்தல்
செருக்கிகழ்ச்சிகுலாசாரத்தியற்கைமோகங்
கருவினுழைவித்திடுதலின்பதுன்பங்
கார்மியத்தின்கூறெனவேகருதிடாயே. (௩௮)

ஊற்றமிகுந்தனுகரணபுவனபோக
முதித்தாவிவினைநுகரவொளியாயோங்கி
மேற்றிகழாணவவிருளையொதுக்கித்தானே
மேலாகிவிரிந்திடுமாயையினேர்தான்முன்
சாற்றுமருந்தனுகரணவிதங்கணான்குந்
தருமுறையேயொடுக்கியுயிர்தனையுமூல
மேற்றவிருளுடனொடுக்குமிதனாலேனை
யெழுத்திரண்டாயினமாயையென்னும்பேரே. ()

பகர்சுத்தமாயையோங்காரமுதலாய்முப்
பத்தொருபேதாதிவிதப்பலபெயராமவற்றின்
வகைமிக்கபரப்பிரமம்வயிந்தவமாயேய
மாமாயைகுண்டலிநீண்மாயைபடங்குடிலை

தகையுற்றபிரணவம்பேரொளிநாதம்விந்து
 தக்கசிவந்தனுவாதிநாலுடனுன்காகு
நிகரற்றவாக்காதிநிவிர்த்தாதியைந்து
 நிகழ்சுத்தவித்தாதியைந்தெனநின்றிடுமே. (௬0)

தன்மைதருங்கலைநிவிர்த்திபிதிட்டவித்தை
 சாந்தியுடன்சாந்தியாதீதமீதே
நன்மைதருநிரோசாதநாதந்தானு
 நாதாந்தஞ்சத்திவியாபினிமேலாகு
மின்மருவுஞ்சமனையுமுன்மனையுமேலாம்
 வியோமரூபினியனந்தையனுதையிருய்த்
தொன்மைமிகுமனுசிரதையீரெட்டாகத்
 துலங்குபிரசாதகலைவிளம்புமாறே. (௬௧)

பொது முற்றிற்று.



ஆகத்திருவிருத்தம் - ௬௧.



# உ ண் மை.



திருமருவுபிருதிவிநீடப்புத்தேயு
திகழ்வாயுவாகாயம்பூதமைந்தா
மருவுபொறிசோத்திரநற்றுவக்குச்சட்சு
வளந்திகழுஞ்சிங்ஙுவையாக்கிராணமைந்தாம்
பொருவரியசத்தமிகும்பரிசம்ரூபம்
பொருந்திரசங்கந்தமெனப்புலன்களைந்தாங்
கருமமலியிந்திரியம்வாக்குப்பாதங்
கவின்பாணிபாயுருவோடுபத்தமைந்தே. (க)

பொற்பமரொப்பருமந்தக்கரணஞ்சித்தம்
புத்தியுடனகங்காரமனநான்காகும்
விற்பரவுங்கலைகாலநியதிகாணும்
வித்தையராகம்புருடன்மாயையேழாந்
தற்பரமாகியசுத்தவித்தையீசஞ்
சாதாக்கியஞ்சத்திசிவமைந்தாகு
முற்பொலியுமூவகையாய்விரிந்தவெல்லா
மொழிந்திடுவர்தத்துவங்கண்முப்பத்தாறே. (உ)

பிருதிவிமுன்சித்தமுடிவாமெண்மூன்றும்
பிறங்கியநூலாத்துமதத்துவமென்றோதும்
விரிவுகலைமுதன்மாயைமுடிவாமேழும்
வித்தியாதத்துவமாவிரித்துக்கூறுங்

தெரிவரியவித்தைமுதற்சிவமீருகத்
திருந்துசிவதத்துவமைந்தாகக்கூறும்
வருமடைவேயசுத்தமுடன்சுத்தாசுத்தம்
வளரொளிசேர்சுத்தமெனமதிக்குங்காணே. (ங)

சூக்குமைபைசந்தியுமத்திமையுநாவிற்
சொல்லுதவுவைகரியுமெனநான்காகும்
வாக்குகள்விந்துவிற்றேன்றுமென்பர்நல்லோர்
வானுதவுமேடணையுமூன்றதாகும்
போக்கரியவத்தவேடணைநட்பாரும்
புத்திரவேடணையுலகேடணைதாமென்றே
நீக்கரியபெயரிதனுக்குலகம்போற்று
நீடுகுணமொன்பதுமேனிகழ்த்தக்கேளே. (ச)

சாத்துவிகமிராசதந்தாமதமூன்ருகுந்
தருமடைவேயொன்றிலிரண்டாகியாருஞ்
சாத்துவிகத்திராசதஞ்சாத்துவிகந்தன்னிற்
ருமதமுமாமினிபிராசதத்திற்
சாத்துவிகமிராசதத்திற்ருமதந்தான்
ருமதத்திலிராசதநீள்தாமதத்திற்
சாத்துவிகமென்றிருமூன்ருகவெல்லாந்
தருநிரையேயொன்பதெனச்சாற்றினுரே. (ரு)

காமமுடன்குரோதமிகுலோபமோகங்
கருதுமதமாச்சரியங்கனவாங்காரந்
தீமையுறுமிராகமிருநான்கதாகுந்
திருந்துமுயிர்ச்செயலுமிருநான்கதாகு
மேமமுறுமிச்சையறிவியற்றருனு
மெண்ணரியவிருப்புவெறுப்பின்பந்துன்பந்
தோமருவுமயக்கமெனப்பெயராமென்றே
சொற்றிடுவர்நற்றவநூறுணிந்துளோரே. (சு)

மன்னியவாக்காதிகளின்விடயமாகும்
வசனகமனந்தானம்விசர்க்கானந்த
மின்னிலையேவசனாதியைந்ததாகு
மிலங்குமிடைபிங்கலைநற்சுழுனைதானு
முன்னியசிங்குவைபுருடனுடன்காந்தாரி
யோதுமத்தியோடொளிசேரலம்புடையேயன்றிக்
கொன்னமர்சங்கினிகுகுவனெனப்பேராகுங்
கோலமிகுநாடிகளீரைந்ததாமே. (எ)

பேசரியவாயுவுமீரைந்ததாகும்
பிராணனுடனபானனுதானன்சமான
னேசமுறுவியானனிவையைந்துதாமு
நீதிமருவுந்தெய்வவாயுவாகுந்

தேசமருநாகனுயர்கூர்மன்ரூனுந்
திருந்துகிரிகரன்தேவதத்தனீடு
மோசைமிகுதனஞ்சயனென்றைந்துகாலு
மோதியிடிலவைபூதவாயுவாமே. (அ)

தோலெலும்புநரம்புதசைமயிரென்றைந்துஞ்
சொல்லரியபிருதிவியின்கூறதாகு
மோலமிகுமப்புவின்கூறைந்ததாகு
மோடுநீருடனுதிரமூளைமச்சை
மேல்மருஞ்சுக்கிலமாமென்றுகூறு
மேவியவாகாரமுநித்திரைகடாமுஞ்
சீலமிகும்பயமுடன்மைதுனமுஞ்சோம்புந்
தேயுவின்கூறென்றுலகஞ்செப்புங்காணே. (கூ)

ஓடனடத்திடலிருத்தல்கிடத்தறத்த
லோதரியவாயுவின்கூறைந்ததாகு
நாடரியகுரோதமிகுலோபமோக
நண்ணுமதமாச்சரியமைந்துதாமு
நீடியவாகாயத்தின்கூறதாகு
நித்தியமாமக்கினியாதித்தன்சோமன்
சேடமருமண்டலமூன்ருகுமென்றே
செப்பிடுவரொப்பருநூறெளிந்துளோரே. (கo)

சாற்றியமூலாதாரஞ்சுவாதிட்டானந்
தருமணிபூரகமுமனாகதமுமேலே
யாற்றலுறுவிசுத்தியுமாக்கினையுமாறு
மாதாரம்பெண்ணுடனாணலிமூன்றாகும்
போற்றுமுடற்குறிரண்டாமுடம்புநானும்
பூதபுரியட்டகமும்புகலுங்காலைத்
தோற்றியதத்துவமடைவேமொழிந்தவெல்லாந்
தொகையாகவகுத்திடுவர்தொண்ணூற்றாறே.(கக)

பலவாகுஞ்சகலகலைபுராணம்வேதம்
பகருமாசயங்கற்பாசயம்பற்றாக
வலமாரும்பக்குவாசயமூத்தி
ராசயமுமலாசயமுமைந்தாமென்றே
சலமாரும்வியாதியொருமூன்றதாகுந்
தகுவாதம்பித்தஞ்சேத்துமந்தாமென்றே
மலமாமைந்தாணவமற்றிரோதைமாயை
மாமாயைகார்மியமாமதித்துக்காணே. (கஉ)

அன்னமயம்பிராணமயமதனைநீங்கா
தமருமனோமயம்விஞ்ஞானமயநூல்கள்
பன்னருமானந்தமயமைந்துதாமும்
பஞ்சகோசங்களெனப்பகரலாகு

முன்னியதோறசையுதிரமெலும்புமேதை
மூளையுடன்சுக்கிலந்தாதேழதாகு
மன்னுபரைதிரோதாயியிச்சைஞானம்
வருங்கிரியையருட்சத்திவகுப்பைந்தாமே. (கங)

சீராருந்தொழில்சிருட்டிதிதிசங்காரந்
திரோபாவமனுக்கிரகமெனவைந்தாகு
மேராருந்தொழிலதிபர்பிரமன்மாய
னெண்ணுமரனீசன்சதாசிவனைந்தாகு
மாராதவக்கரங்களைந்ததாகு
மகாரவுகாரமகாரம்விந்துநாதம்
பாராருமுபதேசமூன்றதாகும்
பகர்சமயவிசேடநிருவாணந்தானே. (கச)

சரியையொடுகிரியையிகுயோகஞானந்
தக்கபதநாலுபதமுத்திநாலாம்
விரிவுதருசாலோகஞ்சாமீபங்கள்
விண்ணிகழ்சாருபஞ்சாயுச்சியந்தாந்
தெரிவரியஞானமுநாலாகுங்கேட்டல்
சிந்தித்தறெளிதலுயர்நிட்டையென்றே
பிரிவிலுயிர்விஞ்ஞானகலர்கணீடும்
பிரளயாகலர்சகலர்பேதமூன்றே. (கரு)

தகைவிரவுமாயையொருநான்கதாகுந்
தனுகரணபுவனபோகந்தாமென்றே
வகைகிறுவுங்கன்மமொருமூன்றதாகு
மன்னியசஞ்சிதம்பிராரத்தமேலைச்
சிகையுறுமாகாமியமுமெனநூலோதுந்
தெய்விகமுற்பவுதிகமாத்துமிகமென்றே
தொகைமருவும்பிராரத்தமூன்றதாகுந்
தொல்புவியந்தரஞ்சுவர்க்கமுலகமூன்றே. (கசு)

ஓங்கியகேவலஞ்சகலஞ்சுத்தமென்றே
யோதியகாரணவவத்தைமூன்றதாகுந்
தாங்கரியகேவலகாரியமைந்தாகுஞ்
சகலகாரியவவத்தைதானைந்தாகு
நீங்கரியசுத்தகாரியமைந்தாக
நிகழ்த்திடுவரவவத்தைபதினெட்டாமென்றே
யாங்கடைவிற்பெயர்கீழாலவத்தைமத்தி
யாலவத்தையுடன்மேலாலவத்தையாமே. (கஎ)

சாக்கிரஞ்சொப்பனஞ்சுழுத்திதுரியமான்மாத்
தன்னிலையுண்மையையுணருந்துரியாதித
மாக்குமதுகேவலகாரியமைந்தாக
வறைவர்சகலவத்தையின்காரியமைந்தாகுஞ்

சாக்கிரத்திலதீதஞ்சாக்கிரத்தஞ்சாமற்
றகுதுரியஞ்சாக்கிரத்திற்சுழுத்திதானுஞ்
சாக்கிரத்திற்சொப்பனஞ்சாக்கிரத்தினன்பாஞ்
சாக்கிரமாமென்பரநட்:-லேவர்தாமே. (கஅ)

நின்மலசாக்கிரஞ்சுத்தவித்தைதயைந்தா
நின்மலசொப்பனத்தீசமுதனலாகு
நின்மலமாஞ்சுழுத்திசதாக்கியமூன்றுகு
நின்மலமாஞ்சத்திசிவந்துரியத்தாகு
நின்மலமாமதீதத்திற்சிவமொன்றாக
நிகழ்த்துவர்சுத்தவத்தையின்காரியமைந்தென்றே
மூன்மலிகாரியவவத்தைமூவைந்தாகு
முதலவத்தைமூன்றவத்தைமூவாருமே. (ககூ)

தனுகரணபுவனபோகங்கள்கூடாத்
தன்னிலேயாமன்னிருள்கேவலமதாகுந்
தனுகரணபுவனபோகங்கண்மாயை
தாமருவிவினைநுகர்தல்சகலமாகு
மினையவிவையிருவகையும்பவவித்தாகு
மிவையுயிருக்கன்னியமென்றிவற்றைநீங்கிப்
புனிதனருளாலமலன்கமலபாதம்
பொருந்துமதுசுத்தமெனப்புகலுநூலே. (உ0)

மன்னியகேவலசகலசுத்தமூன்று
மதித்துயிர்கட்கவதரமாய்வைத்ததேனிங்
கென்னிலிவைகேவலமாணவத்தைநீக்கு
மிருஞ்சகலமுறுவுறுமாயையினைநீக்கும்
பன்னரியசுத்தமிருவினையைநீக்கும்
பகர்தருமிம்மூவகையுமசத்தாமென்றே
சொன்னமருமிறையருளாலகற்றுமேனி
குருலிங்கசங்கமமாங்குறியினாலே. (உக)

இந்திரியமொருபதுமாத்திரையீரைந்து
மிலங்கியவந்தக்கரணநான்குதாமு
மூந்தியகாலையிரண்டுமுயிருங்கூடி
யுற்றறிதல்சாக்கிரஞ்சொப்பனத்திலோது
மிந்திரியமீரைந்துமகற்றிநின்ற
வெண்மூன்றுமெனுஞ்சித்தம்பிராணன்றானு
மந்தமுறுஞ்சுழுத்தியினிற்பிராணவாயு
வருந்துரியந்தனிற்போதனதீதத்தாமே. (உஉ)

மூலமதிற்புருடனுயிருடனுளனாமெனவே
மொழிந்திடுவருயிருடனேமுழுப்பான்மையிலபான்
மேலமருஞ்சாக்கிரத்தைம்புலனுயிர்களருந்தில்
வித்தாகியுற்பவிக்கும்வேறறியப்படாதா

மாலமருந்துரியாதீதத்திலுயிர்தானே
மருவியிடும்புருடனுமங்குளனெனவேமதிக்கின்
மூலமுயிருண்மைநிலைதன்னியற்கையெனவே
முதல்வனருணூலுணர்ந்தோர்மொழிபழுதாயிடுமே. ()

தூலவுடல்சாக்கிரஞ்சூக்குமவுடல்சொப்பனமாஞ்
சுழூத்திபிரகிருதியுடற்றுரியநிலையதுதான்
மாலுறுமோகினிவடிவாமலிதுரியாதீத
மாருதமலநிலையான்மாவியற்கைவடிவா
மேலமருஞ்சுத்தவித்தையீசர்சதாசிவமு
மேவரியசத்திசிவம்விதித்திடுமைவகையுங்
கோலியமேலாலவத்தைபொருந்துமுயிர்க்குடலாங்
கூறியசாக்கிரமாதியதீதமுடிவுறவே. (உச)

ஐவகையாமவத்தைகள்சாக்கிரமதனிலுளவா
மவைதாமுன்னறிந்தவனைக்கண்டறியாதிருத்தன்
மையலுறுமதீதநிலைமோகினியைப்பொருந்தி
வாயுவியங்குதறுரியமரனையடைந்துடனே
பையநினைவெழுந்திருத்தல்சுழுத்திநிலையதுசொப்
பனம்புரியட்டகமருவிப்பகுத்தறியாவறிவா
லையமுறறூலவுடலடைந்தவனுமெனவே
யறிந்திடுதல்சாக்கிரத்திற்சாக்கிரமென்றறியே. ()

இந்திரியமீரைந்துமவித்தைதானு
　　மிலங்குசுத்தவித்தையுடனிதற்குமேலா
மந்தமிறத்துவமிருபத்திரண்டுநாமு
　　மராகமுமீசுரமுடனவ்வியத்தந்தானுஞ்
சிந்தையுநற்சதாசிவத்தோடியங்கும்வாயு
　　செறிகாலங்கலைநியதிகளுஞ்சத்தி
விந்துவுடன்பிரகிருதிசிவத்தோடேக
　　விமலனருண்மேவிலுயிர்சுத்தமாமே.　　　(உசு)

பொறியினிலொன்றதற்கிசைந்தபூதமொன்று
　　புரிகரணநான்குகலாதிகளேழைந்தா
மறிகருவியிதனுலோர்விடயந்தன்னை
　　யறிந்திடுதல்சாக்கிரமாந்தன்னைக்காண்ட
னெறிதருசொப்பனம்பரையாந்தனைக்காணுத
　　நிலவுபரம்பரைநிறைவேசுழுத்தியாகும்
பிறிவருஞானந்துரியமாகும்
　　பெருதுசுகாதிதநிலைபதிதமாமே.　　　(உஎ)

பூதமுதலாயவத்தையீறதாகப்
　　பொருந்தியதத்துவமனைத்தும்பொருவிலாம
லோதியிடுந்தொகையிருநூற்றிருபத்தாரு
　　முயிர்க்கிவைதாந்தனுகரணபுவனபோக

மாதலினுலுயிரிவற்றைத்தானென்றெண்ணி
யழுந்தியிடும்பெத்தநிலையகற்றுமாறு
சோதிகுருபரனாய்வந்திவற்றைநீக்கிச்
சொலலரியமுத்திநெறிநல்குந்தானே. (௨௮)

மாயாபோகத்தடைவேசிக்கனவுபுவியா
மருவிரதநெகிழ்ச்சிபுனல்வளரனல்சுட்டொன்ற
னேயாருந்தொழிலவற்றைத்திரட்டுதல்காலண்ட
மிறைபொருளிற்றேய்வறவேநிறுத்துதல்வான்குணமாஞ்
சாயாதுசோத்திரத்துக்கிடங்கொடுத்தல்செவிக்குத்
தகுகுணம்விண்ணிடைநின்றுசத்தமறிவதுவா
மோயாதசோத்திரத்துக்குறுங்கன்மிவாக்கா
முயர்வசனம்வாக்கினுக்குவிடயமெனவுணரே. ()

காற்றினுக்குக்குணந்துவக்குக்கிடங்கொடுத்தறுவக்கின்
கருதுகுணங்காலிடமாய்ப்பரிசமறிந்திடலா
மேற்றதுவக்குக்கினியகருமியதுபாத
மியங்குகமனம்பாதவிடயமதேயாகு
மாற்றுமழற்குணஞ்சக்குக்கிடங்கொடுத்தல்சக்குக்
கானகுணந்தீயிடைநின்றுருவமயந்தறிதன்
மாற்றருநேத்திரந்தனக்குக்கருமியதுபாணி
மற்றதற்குவிடயமிடலேற்றலவையாமே. (௩௦)

சலத்தினுக்குக்குணஞ்சிங்குவைக்கிடந்தான்கொடுத்த
ரூலுவுக்குக்குணநீரினின்றிரதமறித
னலத்தகுதாலுவின்கருமிபாயுருவாமதற்கு
நண்ணரியமலவிசர்க்கங்கழிப்பதுவாம்விடய
நிலத்தினுச்குக்குணநாசிக்கிடங்கொடுத்தன்மூக்கி
னிகழ்குணமண்ணிடமாகநின்றுமணமறிதல்
வலித்திடுமாக்கிராணத்துக்குறுங்கருமியுபத்த
மனமிகுமானந்தமதற்குயர்விடயமெனுமே. (௩௧)

தரையுரத்துத்தரித்திடுதலுருவமருஞ்சொருபஞ்
சதுட்கோணங்கிடத்தல்சுபாவஞ்சிறப்புவிசேட
நிரைதரித்தவானளவும்வியாத்திவியாபகந்தா
னீடியயோசனைநூறுகோடியெனவிரிந்தே
யுரைபரித்தநவமணியைவகைலோகநிறமா
யுடலினுமைவகையாகிவிரிதலுயர்குணந்தான்
வரைவகற்றும்பொறைநிமம்பொன்னிவையறிதல்காட்சி
மற்றிதைவிட்டகன்றிடுதல்சுத்தியெனமதியே. ()

அறலுருவங்குளிர்ந்துபதஞ்செயல்சொருபம்பிறைபோ
லாதல்சுபாவம்விழுதனெய்மையதன்விசேடம்
விறன்மருவும்புமானளவும்வியாத்திவியாபகந்தான்
மேதினியிற்பதின்மடங்குயோசனையாய்விரிந்தே

திறலெழுவாரியும்பிரளயங்களுமாயுடலிற்
செறிதருகாரியமைந்தாய்த்திகழ்வதுவாம்வெண்மை
நிறமதுகட்டுண்டல்குணமிவையறிதல்காட்சி
நீரசத்தென்றகன்றிடுதல்சுத்தியெனநிறுத்தே. ()

எரியுருவஞ்சுட்டொன்றறிரிகோணஞ்சொரூப
மெழுதல்சுபாவம்பெருமைவிசேடமிதன்வியாத்தி
விரியுமோகினியளவும்வியாபகமைந்தழலாய்
மிகுபதினுயிரகோடியோசனையாய்விரிந்தே
பரிவுறுகாயத்தினுமைவகையாதல்குணந்தான்
பந்தமொளிவிளக்கெனநின்றனுதிபதஞ்செயலா
மரியநிறஞ்செம்மையிதையறிதறிசனந்தா
னங்கிசடமென்றறிதல்சுத்தியெனவறியே. (௩௪)

வளிக்குருவஞ்சலித்துமிகத்திரட்டலறுகோணம்
வளர்சொருபந்தெரியாமனிற்றலிதன்விசேடந்
திளைத்தல்சுபாவந்நிறைதலதற்கினியவியாத்தி
திகழ்சதாசிவமளவும்வியாபகஞ்செப்பிடுங்கால்
விளற்கருநூறுயிரயோசனைகோடிவிரிந்தே
மேவுதசவாயுவுமாய்மெய்யினுமைவகையா
மளப்பரியநிறங்கருமைகுணம்பிரித்தலிதனை
யறிதறிசனஞ்சுத்தியதனையகன்றிடலே. (௩௫)

விண்ணுருவநிரந்தரமாயிடங்கொடுத்தல்சொரூபம்
விருத்தமசையாதுநிற்றல்சுபாவமிதன்விசேட
நுண்மைவியாத்தியுஞ்சத்திதத்துவத்தினளவா
நுவலும்வியாபகங்காலிற்பதின்மடங்காய்விரிந்தே
மண்முதற்பூதங்களெல்லாமடக்கியேதன்னுண்
மருவுமுடலினுமைந்துவகையாதல்குணந்தா
னெண்ணரியகடாகாசமடாகாசந்தூம
மிதனிறங்கண்டிடல்காட்சிசுத்தியிதைவிடலே. ()

பற்றிடுதனிச்சயித்தலெழுந்திருத்தலமூர்தல்
பகர்வரியமனம்புத்தியாங்காரஞ்சித்த
முற்றதொருவிடயத்தைச்சத்தாதியதனை
யொருபுலனைக்கழற்றியொருபுலனினுறவைத்தன்
மற்றதனிற்பலனருந்தல்புதுமையினைச்செய்தல்
வரைந்ததுவாய்நிறுத்தறுெழில் போதமறிவுறுதன்
முற்றியபேராசையெலாநான்புசித்தேனென்றன்
முழுதுமயக்கிடலடைவேகலாதியென மொழியே.

புகலருமூலப்பகுதிபிரகிருதிபு மானேம்
புலனுகர்காலத்துதயன்பொதுநிலையனாதிதன்
சகலவியாபிருநீசன்பசுஞானன்முதல்வன்
சடத்துவனவ்வியத்தனுயிரியமானன்சகல

னகலரியசித்தசித்துவருவினைவித்துலவா
வாங்காரவிருத்திகரனான்மாவென்றினமு
மிகல்புருடதத்துவத்துக்குரியபெயர்பலவென்
றியம்புவர்களருங்கலைகணிரம்பவுணர்ந்தவரே. ()

சத்தமுதல்விடயத்தைப்பகுத்தறிதல்வித்தை
தக்கதொழிற்படுத்திடுதலீசர்தொழின்ஞான
மொத்ததுசாதாக்கியமாஞ்சத்திநசையுறவே
யுருசிப்பித்திடுதல்சிவந்தற்செயல்பண்ணுவதாந்
தத்துவநாலொன்பதுவுஞ்சடமெனவிட்டகன்றே
தானறிவாகாமலறியாமையுமாகாம
லத்தனுணர்த்திடவுணருமறிவுயிரென்றருளா [கலே.
லறிந்தெவையுமிறைசெயலென்றுன்செயல்விட்ட

சிவஞ்சுத்தவித்தைபுமான்வித்தையினையடைவே
செலுத்தியிடுமவையிரண்டுஞானசத்திசெலுத்துந்
தவமிக்கசத்திசதாசிவமிரண்டுமடைவே
தருங்காலங்கலைநியதிபுருடனைநின்றியற்று
நவமுற்றவ்விரண்டையுநற்கிரியைசெலுத்திடுமா
னுடுமகேசுரனீடுமராகமியற்றிடுமால்
பவமற்றமகேசனையிச்சாசத்திசெலுத்தும்
பரையிவற்றைச்செலுத்துமிறைபரையையியற்றிடுமே.

உன்ளொளியாய்நாதவொலியாகிநிற்ற
லுன்னரியசூக்குமை டபைசந்திதானு
மெள்ளரியகுறிப்பினின்மந்திரத்தியான
மிலங்கியமத்திமையுரையாதுரைத்தனெஞ்சால்
விள்ளரியவைகரிதான்பிறருங்கேட்க
விளம்புமொலியக்கரமிவ்வடைவேமேவித்
தெள்ளியவைகரிமுதலாய்வாக்குநான்கிற்
றிகழ்ந்திடுமென்றிறையருணூல்புகன்றதாமே. ()

பரனருளாற்குடிலையினினாதம்விந்து
பரவியசாதாக்கியமீசுரநீள்வித்தை
வருமுறைபேசிவஞ்சத்திசதாசிவந்தான்
மகேசனுருத்திரனிதனின்மருவித்தோன்றும்
விரவியவாக்கக்கரங்கண்மந்திரங்கள்
வேதாதிகலைகள்பதம்புவனமெல்லாந்
திரமருவுநிவிர்த்தாதிகலைகடாமுஞ்
செப்பரியவிந்துவினுற்பவமாமன்றே. (சஉ)

அனந்தனருளாலசுத்தமாயைதன்னி
லரியகலைகாலங்கணியதிதோன்று
நினைந்தகலையினில்வித்தையராகந்தோன்று
நிகழ்புருடன்புலனுகருங்காலந்தோன்று

முனைந்தகலையினின்மான்முக்குணமதாகு
முக்குணமுமொத்தநிலைசித்தமாகு
மினந்தருமுக்குணத்தினிலொன்றுபரிற்புத்தி
யோருரும்புத்தியினுங்காரமாமே. (சங)

ஆங்காரமூன்றாய்முக்குணங்கள்கூடு
மதனுமந்தைசதவைகரிபூதாதி
யீங்காதசாத்திகதைசதத்திற்றேன்று
நிகழ்மனமும்புத்தியிந்திரியமைந்தும்
பாங்கானராசதவைகாரிதன்னிற்
பகர்கருமவாக்காதியைந்துந்தோன்றுந்
தீங்காருந்தாமதபூதாதிதன்னிற்
றிகழ்ந்திடுஞ்சத்தாதியினிற்றிகழும்பூதம். (சச)

சத்தத்தில்வெளியுதிக்கும்பரிசந்தன்னிற்
சமீரணனுற்பவமாகுமுருவந்தன்னி
லொத்தொளிருமங்கியிரதத்திற்றேன்று
முதகமிகுங்கந்தத்திலுதிக்கும்பூமி
வைத்தகுணமொன்றினுக்கொன்றதிகமாகு
மலரயன்முன்னைவரதிதெய்வமாகுந்
தத்துவங்கள்சிவமாதிபுவியீருகத்
தருமுறையேயொடுக்குமெனச்சாற்றுநூலே. ()

ஓதுபுறக்கருவியறுபதுமாறு
    லொடுங்குமுறையைம்பூதத்தையைந்தாகும்
பூதபரிணுமமுறுநாடிபத்தும்
    புடவியினிலேயிருகால்பொருந்துங்காலி
னீதிவசனுதிகள்வாக்காதியைந்தி
    ணிலவியவிந்துவிஞலுவாக்குமேவுங்
கோதுறுமூவேடணேயாகாயமேவுங்
    குணமூன்றும்புமான்றனேயேகூடுங்காணே. (௪௬)

போற்றியிடுஞ்சத்தாதிகரணமூன்றும்
    பொருந்துபுரியட்டகமாஞ்சூக்குமத்தே
யேற்றமிகுந்தத்துவங்கண்முப்பத்தாறு
    மிசைந்தடங்கும்புவியாதிசோத்திராதி
சாற்றியவாக்காதிவசனுதியெல்லாஞ்
    சத்தாதிதனிலடங்குஞ்சித்தந்தானு
மாற்றலுறுங்கலாதிசிவகருவியெல்லா
    மடங்கியிடுமனம்புத்தியாங்காரத்தே. (௪௭)

மூலமுதலென்மூன்றுமாயையென்று
    முயங்குகலாதிகளேழும்புருடனென்றுங்
கோலுசிவமுதலேந்துமீசனென்றுங்
    கூறுவர்மான்மோகினிநீள்விந்துவென்று

மேலமருமாயையிருபத்துநாலோ
டியல்புருடனுடனிருபத்தைந்தாமென்று
மேலமருமீசனுடனிருபத்தாருய்
விதிப்பர்பரசிவத்தொடிருபத்தேழென்றே. (௪௮)

பூதமவையைந்தடவேயொன்றினினுன்காகப்
பொருந்திருபதுடன்முதலேந்தையைந்தாம்புகலி
ஞேதியவானுலாகுமதிலொருகூறனில
னுறில்மனமாமொருகூறங்கெரிமருவிற்புத்தி
நீதியிலங்கொருகூறுசலமருவிற்சித்த
நின்றதொருகூறுபிருதிவியுறிலாங்கார
மாதிமுதலவான * மியமானன்னிவ்வடைவே
யனிலனுமைவகையாகுமதுபகரக்கேளே. (௪௯)

காலுமொருநான்கதனிலொருகூறுவானிற்
கலக்கிலதுசமானனொருகூறழலிலுதானன்
கோலுமுதகத்தொருகூறபானனெனப்புகலுங்
குலவுமொருகூறவனியுறிலதுவேபிராணன்
சாலுமுதல்வாயுவியானன்றிறத்திருதுந்
தழலுமொருநால்வகையாமொருகூறம்பரத்தின்
மேலுறிலங்கதுசெவியாங்காலொருகூறுடலாம்
விரிதிரைநீருறிலொருகூறதுதாலுவெனுமே. (௫௰)

* இயமானிலே-யிவ்வடைவே என்றும் பாடம்.

எனுமொருகூறவனியிலாக்கிராணமாகு
மெரிமுதனேத்திரமாகுநீர்நான்காகு
முனிலொருகூறண்டமுறிற்சத்தமாகு
மொருகூறுவளிபருவிற்பரிசமாகுந்
துனியொருகூறெரிமருவிலுருவமாகுந்
தொடர்ந்தொருகூறவனியுறிற்கந்தமாகுந்
தனிநிலைநீரிரசமெனப்புகலலாகுந்
தரணியினல்வகைமதுவுஞ்சாற்றக்கேளே. (ருக)

சாற்றிலொருகூறுவிசும்புறில்வாக்காகுஞ்
சமீரணனிலொருகூறுபாதமாகு
மேற்றவெரியினிலொருகூறடையிற்பாணி
யிரும்புனலிலொருகூறுபாயுராகு
மாற்றியமண்முதனிலையேயுபத்தமாகு
மறைந்தடைவேதத்துவங்களையைந்தாமுற்
போற்றியபூதங்களுநாற்கரணந்தன்னைப்
பொருந்தியற்றிடுநிலையும்புகலக்கேளே. (ருஉ)

வாயுவிடமாகமனஞ்சஞ்சலமாய்நினையும்
வன்னியிடமாய்ப்புந்திபண்ணிநிச்சயங்க
ளாயுநீரிடஞ்சித்தஞ்சலித்துக்கொண்டழியு
மாங்காரமண்ணிடமாயபிமானப்புரியு

நேயமுடனைந்தாந்தத்துவமைம்பூத
　　நெறியெனவேவேதாந்தநிலையுடையோர்மொழிவர்
தூயசிவாகமசைவசித்தாந்தநிலையோர்
　　சொல்லாரிப்பொருளதனைக்கொள்ளாரென்றுணரே. ()

அனைத்துலகுமெழுவகையாயவனவளோடதுவா
　　யளவிலுளவாயுலவியழிந்திடலாலிவற்றைத்
தனக்குமுதனடுவீறிலானெனவையுங்கடந்த
　　தலைவனியற்றிடவேண்டுந்தானுவுளவாக
மனத்தவனைநினைத்தரியசித்திமுத்திபெறலான்
　　மருவுபசுவர்க்குமுளமலமூன்றுமுளவா
மூனறகரியதுக்கசுகமஞ்ஞானமயக்க
　　மூயிருறலான்மும்முதலுமநாதியெனவுணரே. ()

அண்ணறிருமுகமைந்தாமீசானம்புருட
　　மகோரமரும்வாமஞ்சத்தியோசாதமென்ன
நண்ணியிடுமீசானகலையைந்தாம்புருட
　　னயந்தகலையொருநான்காநாலிரண்டாமகோரந்
திண்ணமிகும்வாமகலையொருபதுடன்மூன்றாந்
　　திகழ்சத்தியோசாதத்தெண்கலையாந்தெரிந்தே
யெண்ணமருங்கலைமுப்பத்தெட்டாமென்றிறைநூ
　　லியம்பியிடுமிவைநாமம்விளம்புமுறைகேளே. ()

சத்தியத்தெண்கலைநாமஞ்சாற்றிடுவாமடைவே
 தகுஞ்சித்தியிருத்தியுடன்றுவிதியுமிந்திரையு
நித்தியமேதாவினியகாந்தியுடன்சுவதி
 நிகழ்திருதியெனவெட்டாநிரைநிரையேதான
மொத்தவலப்பான்முதலாயகங்கால்களிரண்டு
 முரைத்தவகங்கையிரண்டாக்கிராணமுடனுச்சி
வித்தகமாம்வாகுவிரண்டிவையிருநான்கடவே
 வியாபரிக்குமெனமுதல்வனூலுரைக்குநெறியே.

வாமகலைபதின்மூன்றுமதனுமம்புகலில்
 வளரிரசாகூரக்காமகிழிரதிபாலி
§ காமினியாமினிகிரியையிக்காதிக்காவுங்
 கருதரியதாத்திரியும்பிராமியுமோகினியு
மேமமுறுமவாவெனவுமாமிதற்குத்தான
 மிசைந்தனபாயுருவிலிங்கமிருகுறங்கீர்முழந்தாள்
சேமமுறுங்கணைக்கால்களிரண்டுபதமிரண்டுந்
 திருந்துகடிதடம்பக்கமிரண்டிடமுந்திகழும். ()

சாற்றியிடுமகோரகலையெட்டாகுமதன்பேர்
 தமமோகங்க்ஷைநிட்டைதகும்பையுண்மிருத்துப்
போற்றுபசிநசைதிருட்டாவெனுமிதற்குத்தானம்
 பொருந்திதயங்களமிருதோளுந்திமடிபுறமார்

§ காமவியாபினி என்றும் பாடம்.

பேற்றவிடமெனப்புகல்வர்புருடகலையொருநான்
கெழினிவிர்த்திபிதிட்டையுடன்வித்தையிருஞ்சாந்தி
யாற்றியதற்புருடாதியானனநான்ககலா
தமருமுதலறைந்தகலையனைத்துமியற்றிடுமே. ()

அரியதிறலீசானத்தைங்கலையாமதன்பே
ரரிச்சினியங்கதையோடங்கருட்டைசுவாலினியு
மரிசியெனவிவைமுகமைந்தினுமகலாவியாத்த
மருவியிடுந்தொகைமுப்பத்தெண்கலையாஞ்சத்தி
விரவியபஞ்சப்பிரமத்தினிலடங்கிபுலகம்
விதித்துவகுத்தடக்கியிடுமேன்மையினால்விளங்குந்
திரமருவுஞ்சகம்பஞ்சப்பிரமமயமெனவே
தெளிந்தவரேநம்போதக்களங்கமகன்றவரே. ()

புடவிவிசும்பளவுதகம்புமானளவாம்வன்னி
புகலருமோகினியளவாம்பொருவருகான்மருவு
மடலுறுசாதாக்கியத்தம்பரநாதமளவா
மாங்காரங்கிரியையரும்புத்தியுயர்ஞானந்
திடமருவுமனமிச்சாசத்தியளவாகுந்
திகழ்சித்தந்திரோதானமளவாகுமுள்ளம்
விடலரியபரையளவும்வியாத்தமுறுமெனவே
விளம்புவர்களுலகியல்பையகன்றநெறியினரே. ()

அவனிதனிற்பிரமாண்டமடங்குமதுநிவிர்த்தி
  யப்புவினிற்புமானெண்மூன்றடங்குமதுபிதிட்டை
துவமருவுங்கலாதிகளேழங்கிபினுற்றமருஞ்
  சொல்லிலதுவித்தைசுத்தவித்தைமுதன்மூன்றுந்
தவமருவுமூலவையினிலடங்குமதுசாந்தி
  சத்திசிவம்விசும்பிலுறுமதுசாந்த்யாதீத
நவையுறுமைம்பூதத்திற்கருவிகளாருறு
  நயந்தமருமெனமொழிவருயர்ந்தபெருந்தவரே.

தக்கபரைகலைசாந்தியாதிதத்தாற்
  சதாசிவநற்றெழிலினையுந்திரோதைசாந்தி
மிக்ககலையாலீசன்றெழில்கடாமும்
  விளங்கருள்சேரிச்சைகலைவித்தைதன்னுற்
றெக்கவுருத்திரன்றெழிலுஞானசத்தி
  துலங்குகலைபிதிட்டையின்மாறெழிலுமேனை
யக்கணமேகிரியைகலைநிவிர்த்திதன்னு
  லயன்றெழிலுநடத்தலிறையாடலாமே. (சுஉ)

உன்னரியபரன்கிரியைநிவிர்த்திகலையதனி
  லுயர்தருமந்திரமிரண்டாற்புரமொருநூற்றெட்டால்
வன்னமுடிவெழுத்தொன்றல்வரும்பதநாலேழான்
  மலரயன்முன்னிலையாகமதித்துயிர்கட்கிதமாய்

மன்னுபுவிதத்துவத்தினிடமாகமருவி
வருநாசியுபத்தமதால்வருங்கருமப்பயனை
யங்கிலேயேயருத்தியபின்முன்போலேன்ற
வருவினையைநிவிர்த்தியினிலடைத்திடுமென்றுணரே. ()

ஞானகலைபிதிட்டையினின்மந்திரங்களிரண்டா
னுடியதத்துவமிருபத்தொருமூன்றுனயந்த
வீனமிலெண்மூவெழுத்தாற்பதமெழுமூன்றதனு
லெண்ணேழுபுரமதனுலெழிலரிமுன்னிலையா
லேனையுயிர்கட்குதகமிடமாகவிளங்கு
மிந்திரியஞ்சிங்குவைபாயுருவதனுலேய்ந்த
மானவினைப்பயனுகர்வித்தவ்வழியாலடைந்த
வல்வினையின்பயன்முன்போல்வைத்திடுமக்கலையில். ()

இச்சைகலைவித்தையினிலுருத்திரன்முன்னிலையா
லிசைதருமந்திரமிரண்டாற்பதநாலேந்தான்
மெச்சியதத்துவமேழால்வன்னமேழான்
மிகுபுரமூவொன்பதனுல்விதித்தான்மாவுக்
கச்சமிலக்கினிவழித்தாநேத்திரங்கையெனவே
யமர்தருமிந்திரியமதாலடைந்தவினைப்பயனை
நிச்சயமாயருத்தியபினேன்றவினையனைத்து
நிகழ்தருவித்தையின்முன்போலடைவுறவைத்திடுமே. ()

ஆதிகலைசாந்தியினின்மகேசுரன்முன்னிலையா
லருட்டருமந்திரமிரண்டாற்பதம்பதினென்றதனு
லோதியதத்துவமூன்றால் வன்னமூன்று
வுயர்புவனம்பதினெட்டா லுயிர்கட்கன்பால்
வாதமிடமாந்துவக்குப்பாதந்தன்னுன்
மருவுமிருவினைப்பயனையருத்திமுன்போ
லேதமுடனேன்றவினைப்பயனியாவு
மிருத்திடுவன் சாந்தியிலென் றிசைக்குநூலே. ()

பரையுதவுமதீதகலைதனிலன்பாகப்
பகர்தருமந்திரமூன்றுற்பதமொன்றுவு
முறைதருதத்துவமிரண்டாலெழுத்திரெட்டா
லோங்குபுரம்பதினேந்தா லுயிர்கட்கென்றுந்
திரமருவுஞ்சதாசிவன்முன்னிலையால்வானிற்
செறிந்தசெவிவாக்கதனுற்சேருங்கன்மம்
விரைவினுடனருத்தியபின்முன்போலேன்ற
வினையையடைத்திடுமிறையக்கலையிலன்றே. ()

அத்துவாவடிவாமெம்மிறைமுடிதான்கலைக
ளைந்தாகுஞ்சாந்திமுதலானநான்குரமாம்
வித்தைமுதன்மூன்றிரண்டாம்பிதிட்டாதியுந்தி
வியன்பாதநிவிர்த்தியதாமிளிர்துவக்கக்கரங்கள்

வைத்தபுவனங்கண்மயிர்மந்திரங்கணெய்த்தோர்
வளர்திகழும்பதங்களருந்தசையாகுமதித்த
தத்துவங்கள்சுக்கிலமோடத்திணமூளை
சத்திகடாமேந்திரமூவைந்தாமிந்தகையே. (சுஅ)

அரியபதிபரன்றனதுசத்திகண்ணு
யனைத்தினையுமியற்கையினிலறியுமேன்மை
தெரியமொழிகுவம்பரையேவிழியதாகத்
திரோதைகருமணியாகவிச்சாஞானக்
கிரியையதற்குள்ளொளியாயாவுங்காண்பன்
கிளர்மாயைகண்ணாகக்காண்பனென்னிற்
பரிவுறுமாயையின்கண்ணாக்காண்பதெல்லாம்
பசுவருக்கமெனப்புகல்வர்பதியன்றாமே. (சுசு)

அருத்திமிகுமோங்காரம்பீடமாகு
மகாரமேநடுக்கண்டமதற்குமீதே
திருத்தமிகுமேற்பீடமுகாரமாகுஞ்
செறியுமதற்குள்வட்டமகாரமாகும்
விருத்தமுறுமிலிங்கமிலேவிந்துவாகும்
விளங்குசிவலிங்கமுயர்நாதமாகுங்
கருத்தமருட்கரணமிலேயிலிங்கந்தானே
கன்மமிகும்புறப்பூசையிலிங்கமாமே. (எ௦)

நற்பரமாங்கிரியையடிப்பீடமாகு
நண்ணரியநடுக்கண்டஞானமாகுஞ்
சொற்பரவுமேற்பீடமிச்சாசத்தி
சொல்லிலதனுள்வட்டந்திரோதையாகும்
விற்பரவுவிந்துநிலைபரையதாகும்
விளங்குசிவலிங்கமுயர்நாதமாகு
மற்புதமாமகம்புறமொன்றுயநேயத்
தருந்தவர்கள்சிவபூசைபொருந்தினேரே. (எக)

அனுக்கிரகஞ்சதாசிவன்றனுதத்தாலுளத்தி
லருமறைப்புச்சிந்தையினில்விந்துவினன்மகேசன்
றுனித்தமனத்துருத்திரன்றன்மகாரத்தாலழிக்குந்
துழாய்முடியோன்புத்தியினின்றுகாரத்தாலளிக்கும்
பனிப்பதுமனகாரத்தாலாங்காரம்பொருந்திப்
படைத்திடுவனேங்காரப்படிவமுமாமதனு
லனைத்துலகுமிலிங்கமயமாமெவையுமிதுவே
யாக்கியளித்தழித்துமறைத்தனுக்கிரகஞ்செயுமே.

நாதத்திச்சிகாரவெழுத்திசைந்துதோன்று
நண்ணரியவிந்துவினில்வகாரந்தோன்றுந்
தீதற்றயகாரமகாரத்திற்றேன்றுந்
திகழுமுகாரத்தினியகாரந்தோன்றும்

போதுற்றமகாரமகாரத்தின்பாலாம்
பொருந்தியவஞ்செழுத்தையுநம்போதநீங்கிக்
கோதற்றதிருவருளாற்சிவமுன்னாகக்
கொண்டாரேமுத்திநெறிகண்டார்தாமே. (எங)

இறையருளோடுயிராதிமலமெனுமஞ்செழுத்தி
லிறைகேடுமலமருட்கேடாமினிதாந்திரோதை
செறிதருபேதத்திலுயிர்நமயநிலைபொருந்திச்
செபியாமற்செபிப்பதுபோற்றிகழ்தருமுத்தியினு
னிறையிருளினொழிவுசிவந்திரோதையொழிவருளாய்
நின்றநிலைகண்டுமுதற்றன்னிலைவிட்டகன்றே
பிறிவரியசிவமுதலாய்நடுநிலையிலழுந்தும்
பெற்றியரேயுற்பவநோய்பற்றறுநற்றவரே. (எச)

அஞ்செழுத்தேமும்முதலுமாகுமெனவிறைநு
லறையிமதிற்றிரோதையருளரியசிவம்பதியாம்
விஞ்சுமுயிர்த்தொகைபசுவாம்பாசமிருண்மலமாம்
வித்தாகும்பெத்தமுத்தியிரண்டினுக்குமிதுவே
வஞ்சமுற்றபவக்கடலிலெடுத்துயிர்கட்கருளான்
மதிப்பரியசிவானுபவமளிப்பதுவுமிதுவே
யஞ்செழுத்தேயைந்தொழிலுமெந்தைபிரானடமு
மாதலினலிதனுண்மையோதரிதென்றுணரே. ()

அகரவுகரமகரமேவிந்துநாத
மாகியவக்கரமைந்துமிலிங்கமாகப்
பகருமிதன்மிசைசிகாந்துடியதாகப்
பரிவினுடன்வீசியகைவகரமாக
யகரமிகுமபயகரமாகநீடு
மெரிநகரமாகமுயலகனின்பாத
மகாநிலையாகமணிமன்றினூடே
வான்கருணைவடிவாகிநடஞ்செய்வானே. (எசு)

ஊன்றுதமருகக்கரத்தாலுலகுயிர்கட்கின்ப
முறுவிக்குமதுசிருட்டியுகந்தபயகரத்தாற்
றேன்றுமிருவினைதுலையொப்பாக்குமதுதிதியாஞ்
சோதியழற்றிருக்கரத்தாற்சுழல்காரணமறுத்தே
யேன்றபவமறுப்பதுசங்காரம்வலப்பதத்தா
லின்பதுன்பத்தழுத்தறிரோபவமெடுத்தபதத்தா
லான்றிருள்கேவலசகலத்தெடுத்தருளான்முத்தி
யளிப்பதனுக்கிரகமிவையான்பொதுநாடகமே. ()

பரந்தசிவானந்தநடஞ்சிகாரமாகும்
பராபரையேசிதம்பரமாமதுவகார
மரந்தையறச்சிவபோகமருந்துமாவி
யகாரமதாளுதுருஞானங்கள்ஞேயங்

தெரிந்துபகுத்தறியுமறிவழித்தொன்றுக்குந்
திரோதானமுலகமறைத்திடுகாரம்
விரிந்தமலசத்தியழித்தின்பந்தன்னை
மேன்மேலும்விளைக்குமதுமகாரமாமே. (எஅ)

இதயமலரெட்டிதழெண்டிக்கதாகு
மினன்றிசைமுன்பத்திமிகுந்தாகங்கோபந்
துதிதருமின்சொல்லினியவாய்மைநீடுந்
துயில்கமனமருந்தவமைம்புலன்கடுயக்கும்
விதிமுறையேகறங்கெனநின்றுயிர்களாட
விண்டமலர்ப்புண்டரிகபுரத்துஞானப்
பொதுவினிலங்குமையுடனெம்பிறவிநீங்கப்
புலியரவந்தொழப்பரதம்புரிவனுதன். (எகூ)

விரும்புற்றதவம்விரதஞ்சீலமெல்லா
மேல்விளைவென்றறிந்தெவையும்விமலன்கூத்தென்
றிரும்புற்றமனமழலின்மெழுகாயென்று
மியான்செய்தேன்பிறர்செய்தாரெனுங்கோணீக்கி
யரும்புற்றங்கென்னதியானென்னும்பாசத்
தவாமருவும்புறப்பற்றோடகப்பற்றான
பெரும்பற்றையகன்றருளைப்பெறுவோர்ஞானப்
பெரும்பற்றப்புலியூரைப்பிரியார்தாமே. (அ௦)

முத்தியினும்முதலுமழியாதென்றே
மொழிந்திடுமாகமமதனைமொழியக்கேணீ
நித்தியமாம்பரபோகந்துய்ப்பதான்மா
நீடுபரபோகமுயிர்க்களிப்போனீசன்
சுத்தமலமின்பமிகவிளைக்குமாற்றாற்
சொல்லரியமும்முதலுமநாதியாகும்
வைத்தமலமுத்தியின்பம்விளையாதென்னின்
மற்றதுதானின்றநிலைவகுப்பக்கேளே. (அக)

ஆதிதிரோதானத்தாற்பெத்தந்தன்னி
லாணவந்தான்மாயாபோகத்திலின்பம்
போதமுறவிளைத்துயிர்கட்குலகந்தோன்றப்
புனிதனருடோன்றுமன்மறைக்குமாபோற்
சோதியருண்முத்தியினுஞ்சத்திமாந்திச்
சுகானந்தம்விளைத்துயிர்கட்குயிராயீசன்
பேதமறநின்றுணர்த்துமுண்மைதோன்றப்
பிரபஞ்சந்தோன்றுமன்மறைக்குங்காணே. (அஉ)

தரைமுதலாநாதாந்தமீறதாகச்
சாருமலஞ்செம்பினுறுங்களிம்பேபோலக்
கருவியகன்றனுக்கடமைகாணிற்செம்பு
காளிதமற்றடகமாந்தன்மைத்தாகும்

விரவுபசுமலமொளிமுன்னிருளின் மாந்தி
    விளக்குமுயிர்க்கின்பநவவிதமுநீங்கி
யருங்குளிகைதனிலடங்குமதுபோலண்ண
    லடியிணையிலாணவம்விட்டகன்றுபோமே. (அரு)

ஏத்தரியவிலிங்ககுருசங்கமந்தா
    மேகபான்மனம்வாக்குக்காயமாகும்
வாய்த்தமனஞ்சிவலிங்கமாகுமூல
    மலமகற்றுங்குருவருள்சேர்வாக்குமாயை
தீர்த்தருளுஞ்சங்கமமாமேனிதன்னாற்
    றீராதவிருவினையின்கருமநீக்கு
மார்த்தமலமூன்றகற்றுங்குறியீதாகு
    மல்லதுமற்றொன்றாலுமகன்றிடாதே. (அச)

வாரியுநாரமுமொன்றுமிரண்டுமன்றும்
    வாரிதிநீராகாநீர்வாரியாகா
நீரதனால்வாரியினையறியுமாற்றா
    னீரினையேவாரியெனநிகழ்த்தலாகும்
வாரியுநீரிலையாகிற்பயன்கொடாவா
    மற்றதுபோலுயிர்க்குயிராய்மன்னியாங்கே
யாரியனுங்குருலிங்கவேடமாய்நின்
    றருள்புரிவன்வேறாய்நின்றருள்செய்யானே. (அரு)

சூரியனுலனலுமிழுங்காந்தன்ருற்
சுடவரிதாம்வேருகிச்சூழும்பஞ்சைச்
சீருலவுங்கலுழனுற்றீர்ப்போன்றன்ருற்
றீராதுவிடமதுவும்வேருமாகி
லோரிலவைவேறறவேருகினின்ற
வுண்மைபோலநன்னியமாமொருமையாகு
நேரியனுங்குருலிங்கவேடமாகி
நின்றுயிர்கட்கருள்புரியுநிலைமைதானே. (அசு)

தேகமுறுமிந்திரியவியாத்தமான்மாச்
சீவனிருவினைநுகரிற்பசுவாமென்பர்
போகமறுமவத்தைமருவிடுங்காற்றீக்கை
பொருந்தியுடலினையானென்றபிமானிக்கி
லாகுமயற்சகலனிவையனைத்துநீங்கி
யடைதருமாணவத்தினிற்கேவலனுந்தன்னை
மோகமறக்கண்டளவேசுத்தனேனே
முதல்வனெனில்வயிந்தவனுய்மொழியும்பேரே. ()

பேராதசுதந்திரநீக்கதீதந்தன்னிற்
பேணுதிரோதான்மாவாஞானந்தன்னை
நேராகக்கண்டளவேஞானவாறு
நிறைஞானந்தனிற்பொருந்திலறிவென்ருகுஞ்

சீராரும்பூரணமாஞானந்தன்னிற்
றிகழுமகம்புறமெனுஞ்சுட்டகற்றியாங்கே
யேராருமருள்வடிவாய்நின்றபோதி
லிசைந்தபராபரனெனவேயெண்ணலாமே. (அஅ)

எண்ணில்சுகசொரூபதரிசனனும்போதி
லெய்துசொரூபக்கினனும்பரமானந்த
நண்ணியதுதனுவாகிற்பரமானந்தி
நாடுமதிற்கூடுதனீங்கிடுதலின்றி
யண்ணியதாடலேயுறழச்சுபாவமாகு
மானந்தமேலீட்டிற்சிவனுமென்றே
பண்ணுமுயிர்க்கவதரப்பேரீரேழாகப்
பகர்வருட்கவதரப்பேர்பகரக்கேளே. (அசு)

பகருயிர்கேவலமருவிலருளினுமம்
பாவுபிரகிருதியெனும்பண்பிற்றூதுந்
தகவுயிருக்குணர்த்துசகலத்துமாயா
சத்தியருளிருவகையாஞ்சார்புநீங்கி
யிகலருமேலாலவத்தையுணரிலான்மா
வெய்துசிவதத்துவமாமருளினும
மகமருவுமுடலேவெறும்பொய்யென்றுவி
யறிந்தகலிலருளுமங்கடாட்சமாமே. (௬௦)

ஆருயிர்தன்னியல்பையுணர்ந்தருளைக்காணு
　வவதாரத்திலருணுமந்திரோதையாவி
யேமவருளுணரிலருளறிவாமென்ப
　ரெய்துசைதன்யனருளுருவமாகி
ணுமமருடனக்கினியகருணையாகு
　னாடியசீவன்சிவனைநணுகும்போதிற்
றேமிலிரும்பெயரருட்கானர்தமாகச்
　சொற்றிடுவரருட்கருநூலுணிந்துளோரே. (கூக)

பரன்பிரமசாரிபரைகன்னியாகும்
　பரப்பரனைச்சத்தியனுபவியாதென்றும்
வரம்பிலணுக்களையிறையோடாக்கிசேய
　மன்னுமுயிர்ப்பாங்கியெனநீங்குஞ்சத்தி
குரம்பையிலைப்புலனுயிர்களருந்துமாறு
　கூட்டிடுமைம்பொறிபுலனின்பயன்கொளாவா
மரும்பொறியையொழிர்துயிரைப்புலனைக்கூடா
　தத்தனையச்சத்தியொழிந்தடைர்திடாதே. (௩௨)

உடலையுயிரெனமதித்தலன்னமயமாகு
　முயிர்சீவனெனமதிக்கிற்பிராணமயமாகு
உடலைமனமுயிரென்றன்மனோமயமாம்புந்தி
　னாடுமுயிரெனிலதுவிஞ்ஞானமயமாகு

மடன்மருவுமதிதமுயிரெனமதிக்குமதுவே
யானந்தமயங்கோசமைந்தினையும்பொருந்தி
விடலரிதாயாப்புண்டங்ககம்புறமாயவற்றின்
வேறாய்நின்றறிவதுவேயான்மாவென்றுணரே. ()

போக்குவரவுறுமுடலிலறிவனுளனெனவே
புகறல்பிரதிக்கினையாமதற்கேதுபகரி
லூக்கியமெய்யறிவிலையாற்றிட்டாந்தங்கட்போ
லுபயமக்கடமொருவன்கொடுபோகிற்போகுந்
தாக்கறவல்லாதிருக்குமதுபோலிவ்வுடலந்
தான்போக்குவரவுசெயாதாகுநிகமனந்தா
னுக்கையினைநடத்திடுவானவனணுவினியைந்து
மன்னுவயவெதிரேகியனுமானமெனுமே. (கூச)

பொறிபுலன்களுநானல்லேன்மனாதிகளுநானல்லேன்
புகலரியகலாதிகளுநானல்லேன்பொறியா
லறிகருவிநானல்லேனிவைசடமென்றிவற்றை
யறிந்ததில்வேறாய்நின்றவறிவுயிரென்றறிக
நெறிதருதத்துவஞ்சடமாகாமலவென்றிவற்றை
நீயறிந்துநீங்குதற்குநின்னுயிருக்குயிராய்ப்
பிறிவறநின்றுணர்த்திபிடுமொளியருளாமுலகிற்
பிறங்குவிழிக்கொளியுதவுமிருங்கதிரொப்பெனவே

பொன்னதனையடக்கியிடுங்குளிகைபோலும்
 பொருவில்விழியொளியடக்குமிரவிபோலு
முன்னுமிரும்பினையடக்குங்காந்தம்போலு
 முயிரையடக்கிடுமூலமலமேபோலும்
வன்னிதனையடக்கிடுமிந்தனமேபோலு
 மருவுதுரும்படக்கிடுமுப்பளமேபோலு
மன்னபழுமரமடக்கும்வித்தேபோலு
 மரனருளிலடங்குமுயிரறிவுதானே. (சுசு)

உகைத்தாடுங்கயிறகன்றவூசல்போலு
 முலவாததிரிவொழிந்தகறங்கேபோலு
மிகைத்தாடும்விசையறுபம்பரமேபோலும்
 விளங்கொளிசேர்தாழ்ந்தமணிநாவேபோலுஞ்
செகத்தாயசித்திரத்தினிலையேபோலுஞ்
 சிவபோகத்தடங்கியுயிர்செயலொன்றின்றி
யகத்தாயநம்போதப்பற்றுநீங்கி
 யசைவறநிற்பதுபரமானந்தமாமே. (சுஎ)

எண்டருமெய்ஞ்ஞானிகடாநன்மைதீமை
 யியற்றினுமப்பலனுகராரிவர்தம்மேனி
கண்டுதொழுவாரிகழ்வார்தம்பாலெய்துங்
 கருமுகிலின்செயல்போலக்கருதாரொன்றும்

பண்டிகலும்வினையுடலிற்பலிப்பினாலே
பகர்காலந்திசைகளருந்தவங்கள்சீலம்
கொண்டதியானஞ்செபங்கள்பூசையாவுங்
குறித்திடினுமொழித்திடினுமவர்க்கமலன்பணியே. ()

கண்ணொளியையிரவியொளிகவர்ந்துகொண்டேயுலகிற்
காண்பனவெல்லாங்கணுக்குக்காட்டியிடுமதுபோ
லண்ணலுமங்களப்பரியவுயிர்சகுயிராய்நிறைந்தே
யருவினையின்பயனளவினருத்தவனென்றுணர்ந்தே
யுண்ணிலவுமருள்வசமாமொருமைநிலையுடையோ
ருயர்சிவமேகண்டிருப்பருலகநெறியுணரா
ரெண்ணரியபாதகங்கள்புரிந்தவலநெறியே
யியற்றிடினுமவையனைத்துமிறைபணியாயிடுமே. (கூக)

மண்ணாதியைந்தினுக்குமயன்முதலோர்சிவமூர்த்த
மனமாதியைந்தினுக்குமகராதிசிவமூர்த்தம்
பண்ணாருங்கலாதிகட்குநாதாதிசிவமூர்த்தம்
பரனருளேயெவற்றினையும்பரிந்துநடத்திடுமதனா
லெண்ணருஞ்சராசரங்களரனுருவாமெவ்விடத்து
மிறையருளையன்றியுயிர்க்கறிவுதியாதிலகுநுதற்
கண்ணாளன்றிருமேனியாமுலகமனைத்துமெனக்
கண்டாரேபசுபாசம்விண்டாரென்றிடுநூலே. ()

படைக்கலங்கள்கொலைத்தொழில்கள்பலசெய்தாலும்
பாவவிதம்படைக்கலத்தைமேவிடாவாம்
படைக்கலங்கைக்கொண்டவன்பானின்றாற்போலப்
பரனருளின்வசமாகிப்பணிசெய்வோர்க
டுடைத்திடுவர்மலத்தினையெத்தொழில்செய்தாலுந்
துக்கசுகப்பவக்கடலிற்றோயாரென்று
மடைக்கலமாயாண்டசிவன்பாதநீழ
லடைந்திடுவரெப்பதமும்பொருந்திடாரே. (கoக)

சித்தமுறுநினைவுரைகடொழில்பொய்வாய்மை
தீமைநலம்விருப்புவெருப்பின்பந்துன்பம்
வைத்தபுசிப்பிகழ்ச்சிபுகழ்கருமந்தான
மடிமுயற்சிபேறிழவுமற்றுமெல்லா
மத்தனறிந்தளவிலவரவர்க்குநாளு
மருங்கனவுநனவினுநின்றளிப்பதோரார்
தத்தமறிவானுகருங்கருத்தராகித்
தடுமாறியுளமெலிந்துதளர்வரந்தோ. (கoஉ)

உடலிலிருவினையுதவுமிதமகிதப்பயனு
ளுளவாகுமின்பதுன்பவுணவொழியாதுயிர்க்கு
நடலைமருளறிவினுடனுமருந்தில்துவே
நமன்றூதரருத்துவதாநணுகிடுமேல்வினையுஞ்

சடமுடலம்வினை நுகராதறிந்துயிர்தானருந்தா
தலைவனவனவளதுவாநிலைமையினுலுயிர்கட்
கிடமுடனின்றருத்துவனென்றுணர்ந்தருளாலருந்தி
லிறைபணியாமெதிர்வினையுமெரிசேர்வித்தாமே.

குலவுமினன்வரவரவேவிரிந்தநீழல்
குறைந்துகுறைந்துள்ளொடுங்குமாறுபோல
வுலைவிலருளொளிபிரகாசித்தவாறே
யுயிர்ப்போதமலமகலுமொளியோடேயுந்
தலைவனுடனென்றுகாவிரண்டுமாகா
தக்கநிலையருக்கனெதிர்தயங்குமீனு
நிலவொளியுமேகமிரண்டாகாவாபோ
னில்லாமனின்றிடுதனிட்டையாமே. (கoச)

சாத்திரம்புத்தகம்பூசைசமயமதந்தருக்கந்
தந்திரமந்திரயோகந்தவவிரதஞ்சில
மேத்தரியபாவனையெண்சித்திகளேமுதலா
மெப்பயனுமுத்திவிலக்கெனவொருசொல்லதனாற்
றீர்த்தவன்மெய்த்தேசிகனுமவனருளாலகலாச்
சித்தமலமறுத்துலகிற்றீமைநன்மைசெயினும்
வாய்த்தகதிரவன்செயல்போலிசைந்திசையாதொழுகும்
வண்மையரேமெய்ஞ்ஞானவுண்மைநிலையினரே.

கருவிகளுலொன்பதுவும்வேறதாகக்
கண்டகன்றவதீதநிலைகாசியாகு
மருவுமுயிர் தனையறிவென்றறிந்துயாமே
மன்னனெனநின்றநிலையாரூராகுங்
கருவிசடமென்றுயிர்கடம்மைக்காணக்
கண்ணிரவியெனவுயிர்க்குக்காட்டாநின்ற
வருளையுணர்ந்தியாவுமரன்செயலாமுண்மை
யத்துவிதநடந்தொழலம்பலமதாமே. (௧0௬)

இருவகையாமாயையிலுண்டானஞான
மெவ்வளவுண்டவ்வளவும்பாசஞான
மருவியதற்போதத்தாற்சித்திமுத்தி
மதித்தழுந்துநிட்டைபசுஞானமாகும்
பரவுமிவையஞ்ஞானம்பாசஞானம்
பசுஞானஞ்சுதந்திரனேன்றானென்றே
யிருவகைஞானமுநீங்கியருளாலாவி
யீசனடிகூடலிறைஞானமாமே. (௧0௭)

எண்ணியமுற்புசிப்பகலாமாயாபோகத்
திதமகிதமறுகையினூற்றிரோதாயிநட்ட
நண்ணுமிருவினைதுலையொப்பாதலாலே
நாடியமாமாயையுமைந்தொழிலுநட்டம்

பண்ணுமவனவளதுவாமுன்னிலேச்சுட்டொழியிற்
பற்ருகுங்கன்மமலநட்டமாகுந்
திண்ணமிரும்வடிவகலமாயைநட்டஞ்
சிவபோகம்விளைந்திடவிட்டகன்றிடுமாணவமே.()

கூட்டரவுமொழிகையினுற்கிரியையவிழ்ந்தகலுங்
குலவுதரிசனமகலவனுபோகம்விளேயி
னூட்டரியஞானசத்திவேற்றுமையாயகலு
நவையாரும்பெறுதியொழிதிடுதலினுலெவையுஞ்
சேட்டிதமாமிச்சையுமங்கப்பரிசேயகலுஞ்
சிவம்பிரகாசிக்கையினுற்றிரோதாயியகலு
நீட்டியதற்போதமறச்சிவானுபவத்தழுந்தி
னித்தியமாம்பராசத்திவிட்டகலுங்காணே.(௧௦௬)

உடலுயிரன்றென்றகலிற்பூதமுடனவற்றி
னுடனுயகாரியமையைந்துடனேயுலகுந்
திடமிகுபல்லுருவனைத்துநாடிகளுமகலுந்
திருந்துபொறியறவிடயம்பொருந்தாமலகலுங்
கொடியகரணங்களறக்கலாதிகள்விட்டகலுங்
குணமறவேசுத்தவித்தைமுதன்மூன்றுமகலு
மடன்மருவும்வளியகலவிந்தகலுமகலா
வரீங்கிடநாதமகன்றிடுமென்றுணரே.(௧௧௦)

புவிமுதலைந்தும்பூதகஞ்சுகமாமதன்மேற்
 பொறியொருபதொருபதுமாத்திரைமனமுன்னைந்துங்
கவலையுறும்பிரகிருதிகஞ்சுகமென்றோதுங்
 கலைமுதலைந்தும்புருடகஞ்சுகமாங்கருதிற்
சிவமுதலைந்தறிகருவிவயிந்தவகஞ்சுகமாந்
 திருந்துபரைமுதற்சத்திகஞ்சுகமாந்தெரிந்தே
துவமுடனார்ப்புறுபஞ்சகஞ்சுகங்களகன்றோர்
 சுத்தபரசுகாதீதமுத்தரெனுநூலே. (கககூ)

ஞானத்துஞானமகம்புறமென்னுமல்
 ஞானனந்தாதீதத்தழுந்தலாகு
ஞானத்துயோகமிறைஞானந்தானே
 நாடுமிடமெங்குநிறைவென்றுகாண்டல்
ஞானத்துக்கிரியையுயர்பஞ்சசுத்தி
 நயந்தமலனடியகலாதிறைஞ்சலாகு
ஞானத்துச்சரியைகுருலிங்கவேட
 நாதனெனத்தொழுதுபணிமேவலாமே. (ககஉ)

புவிமுதனலொன்பதுவுஞ்சடமாமென்றல்
 பூதசுத்தியுயிருளைப்பொருந்தலுனே
யவமகலுமுயிர்ச்சுத்தியெல்லாமிந்த
 வருளெனவேகாண்டறிரவியநீள்சுத்தி

சிவமுதலாய்மாறிமலந்திரோதைநீங்கித்
திருவருளாலுயிரரனைச்சேர்ந்தொன்றாகிப்
பவமறன்மந்திரசுத்தியிலிங்கசுத்தி
பரனிறைவுட்புகுதல்பஞ்சசுத்தியாமே. (ககூ)

திருந்தியசத்திநிபாதநால்வகையாமந்தந்
திகழ்மந்ததரந்தீவிரந்தீவிரதரம்
பரிந்திதனுக்குறுமுவமையிருங்கதலிக்கூற்றி
பச்சைவிறகுலர்விறகுகரியிலெரிபதிதல்
புரிந்திவர்பக்குவம்பொருளுண்டெனவதற்குப்பொருந்தல்
புளியந்தோலும்பழமும்போலுடற்பற்றறுகை
யரர்தையுலகினைமுழுதுந்துறந்துபொருடேட
லருட்குரவனடியிணைசேர்ந்தவன்பணிசெய்திடலே.

பாலனுடனுன்மத்தன்பசாசன்றன்னைப்
பவமகன்றசிவஞானிக்குவமைகூறும்
பாலகன்மேலுணவொன்றைத்தேடாதானும்
பகருமயலுன்மத்தனன்மைதீமை
சீலமகன்றிடலானும்பசாசன்செய்யுஞ்
செயலலகைச்செயலாகுஞ்செய்தியானும்
பாலனையும்பித்தனையுஞ்சுடுந்தித்தொட்டாற்
பசாசனனைந்திடினுமெரிபற்றிடாவே. (ககரு)

ஒப்பிலுயிர்க்குயிராய்நிற்பதுஞானபூசை
யுயிர்க்குளொளிநோக்குமதுவேயோகபூசை
செப்பரியவாவாகனுதிபுறப்பூசை
செயலறநின்றிடுநேயஞ்சிவபூசையாகுந்
தப்பரியமெய்ஞ்ஞானந்திகழ்ந்தறிவைநாடல்
சாலோகஞ்சாமீபந்தற்பரைதானுதல்
வைப்புறுசாரூபமுயரானந்தபோக
மருவுசுகாதீதஞ்சாயுச்சியமாய்மதியே. (கககூ)

பொற்பமரும்பாற்கடலிலுற்பவமாஞ்சுரபி
புகலிலதன்கோமயத்திற்கூவிளந்தானுளவா
மற்புதமாந்திருமகளவ்வில்வமதிற்பொருந்து
மகிலாரம்பளிதமதனளையதனிலுளவாங்
கற்பமருஞ்சுரர்க்கமுதநவநீதத்துதிக்குங்
கதிருடனேசெந்நெலதன்பாலதனிற்றேன்றுஞ்
சொற்பயில்குங்குலியமரையுற்பலநீரதனிற்
றோன்றியிடும்ரோசனையுமதனுதரத்துதிக்கும் ()

வாசநறும்புனல்சாந்தங்கந்தமாயு
மருவலர்கணுசமருச்சுனமதாகு
நேசமருமலர்செல்வம்பாவநீங்கு
நிறைதுபமவமிருத்துநாசந்திபந்

தேசுலவுமமுதுலகம்புரப்பதாகுஞ்
சித்திகளெட்டுத்தமதானந்தானல்கு
மாசிலருட்பரமனிருபாதம்போற்று
மடியவர்தமட்டவிதார்ச்சனையிதாமே. (கக அ)

ஒருதிவசம்பசாசர்பதமிருதினமீளரக்க
ரொருமூன்றுநாளியக்கர்கந்தருவர்தினநான்
கிருமகவானைந்துதினமூவிருநாளிரவோ
னெழுதிவசம்பிரசையர்கோனெண்கணனெண்டிவசம்
பரிதிகரனவதிவசமொருபதுநாண்முதலாப்
பரனுலகமடைந்தவைவேபலனவையுநுகர்வர்
பொருவிலரன்கழலிணைபமூடர்வழுத்திடினும்
புண்ணியபூசாபலத்தையெண்ணரிதென்றுணரே.

புரிதருதத்துவகாயசுத்திதானும்
பொருவிலிருமூவகையாமத்துவாவின்
மருவுதிரிவிதகருமசுத்திதானு
மனமுறுமாத்துமசுத்தியெல்லாமுண்டாந்
திருமருவுஞ்சிவலிங்கந்தரித்தவாறே
சிவனுருவமாஞ்சீவன்முத்தனுகு
மரியபசுமரத்தகலாதாணிதானு
மனலினுறுகாட்டமுமொன்றாகுமாபோல். (கஉ0)

சொல்லியசந்தானநெறிவிதங்கடாமுஞ்
  சொக்கனுராணியின் சூளுறவுதானும்
பல்வகையாய்பாவகஞ்செய்பூசைதானும்
  பத்தர்களை வைத்தடைவேபணிதருனு
மல்லபருங்களத்திறைநூல்சொல்லாதிங்ஙே
  ராதலினுலன்னியசைவந்தானென்ப
ரெல்லையகம்புறமெனுஞ்சுட்டகன்றநேய
  மேகலிங்கநிட்டைசிவபூசையாமே. (கஉக)

விரிந்தநதிநீரதனிற்சௌசபாதி
  விளம்புமுடற்சுத்தியெலாமுடித்திட்டாலும்
விரிந்தநதிநீரசுத்தமனைத்துநீக்கி
  மேலாகிநின்மலமாய்விளங்குமாபோற்
றிருந்துசிவலீலையினுற்சங்கமந்தான்
  செய்தவெலாஞ்சிவாசாரவிசிட்டமாகும்
பரிந்தொருகுப்போதகத்திலாசூசப்போற்
  பவித்திரமன்னியசைவர்க்கசுத்தாசூசம். (கஉஉ)

இந்தனங்கள்பலபலபேருடையவாகு
  மெரிதழலினிடையிடவேயெல்லாஞ்சேர
வெந்துவிறகினினுமநாசமாகி
  வெண்ணீறென்றொருபெயராய்விளங்குமாபோற்

பந்தமுறுங்குலாசாரமயக்கமெல்லாம்
பரமகுருத்திருநோக்கம்பரித்தவாறே
வெந்தழியுமொருபுழுவேட்டுவனுமாபோல்
விமலனுருவாயெவர்க்குமேலாமன்றே. (கஉ௩)

திருந்தியகற்பகலாதமடநல்லார்க்குஞ்
சிவலிங்கதாரணையாஞ்செம்மையோர்க்கு
மருந்தவமாகியபிரமசாரியோர்க்கு
மருமறையினந்தமுணர்ந்தங்கிமூன்றும்
பொருந்துமுபசாதகர்க்குமுலகவாழ்வு
பொய்யெனவேமெய்யுணர்ந்தபொலிவினோர்க்கு
மிருந்தலமேலாகுசமில்லையாகு
மிரவியெதிரிருளணுகாவியல்பினுமே. (கஉ௪)

முத்திநெறிமூன்றுடல்போடாவுடல்கொண்டேகா
முத்தியையிங்கேபெறுவதுத்தமமாமுத்தி
மத்திமமாமுடலுடன்போய்ப்பெற்றிடுதல்கனிட்ட
மண்ணினுடல்விட்டருளைநண்ணுவதாமவத்தை
யொத்துறிலுற்பவமுளவாமவாவறுதற்றுறவிங்
குண்டாகின்முத்திபெறுமுவமையிதற்குலகிற்
சித்தமுறுங்கவுணியர்கோனுவரையனூரன்
சேரலன்மெய்ப்பொருளேனுஇராதன்முதற்றெளியே. ()

அமலனருண்ஞானமுயிர்க்குயிராய்நின்றே
யனைத்தினையுமியற்றிடுமற்புதமோராமற்
றமதறிவாலலகிறந்தசமயபேதத்
தருக்கமொடுத்தரவாதஞ்சாதிப்போர்க்குஞ்
சிமயவரைதரையுயர்விண்கெடுத்துத்தேடுஞ்
சிதடருக்குந்தினகரனைப்பகலிற்றேடுந்
திமிரமடவருக்குமுயிரிலையென்றோதுந்
தீமையர்க்குமொப்புலகிற்செப்பொணாதே.(கஉசு)

வே று.

கருமுகினிகரனகுழன்மடவரலியர்
களபமென்னகிலிணைகலவாரே
மருமலரயனுடனரிமகபதிமிக
மகிழ்பதமனமுறமதியாரே
யொருவுதலிருவினைவிதிமதிவிபரித
முறுபிறவியினெறியுழலாரே
யருமறைமுடிவினினடமுடையவனிணை
யடிதொழுமடியவரடியாரே. (கஉஎ)

உண்மை முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் - களச.
சிவஞானதீப முற்றுப்பெற்றது.
திருச்சிற்றம்பலம்.

இரேவணாராத்திரியதேசிகர் திருவடிவாழ்க.